# அரபு நாட்டுச் சிரிப்புக் கதைகள்



தொகுப்பு :
பாண்டிச்சேரி
S. முஹம்மது பஷீர்
B.Sc., B.Ed.,



வெளியீடு
காஜியார் புக் டிப்போ, தஞ்சாவூர்.

# அரபு நாட்டுச் சிரிப்புக் கதைகள்

பாண்டிச்சேரி

S. முஹம்மது பஷீர், [illegible]

வெளியீடு




முஸ்லிம் தெரு, M. சாவடி,
த.பெ.எண்: 29
தஞ்சாவூர்.
போன்: 35529

# என்னுரை

"அரபு நாட்டுச் சிரிப்புக் கதைகள்" எனும் இந்நூல் பழங்கால அரபு இலக்கியங்களில் காணப்பட்ட நகைச்சுவை ததும்பும் நிகழ்ச்சிகளைக் கோர்வையாகக் கொண்டது ஆகும். வாய் மொழியே, செவி வழியே வழங்கப்பட்ட கட்டுக்கதைகள் இதில் ஓரிரண்டே இடம் பெற்றுள்ளன. எனினும் உண்மை நிகழ்ச்சிகளே இதில் பெரும்பாலும் கோர்க்கப்பட்டுள்ளன.

முற்கால விகடகவிகள், நகைச்சுவை மன்னர்கள், புலவர்கள் ஆகியோரின் வேடிக்கை வினோதங்களை வாசக அன்பர்களுக்கு இந்நூலின் வாயிலாக வழங்குவதில் மகிழ்ச்சியடைகிறோம்.

அவை நமக்கு நகைச்சுவை உணர்வைத் தூண்டும் அதே வேளையில், நல்ல படிப்பினைகளையும், சிந்தனை உணர்வுகளையும் தூண்டும் என்ற எண்ணத்திலேயே இந்த நூலினைத் தொகுத்தோம்.

அனைத்தும் இறைவன் செயல்!

வாசக அன்பர்களின் நல்லாதரவையும், வல்ல இறைவனின் நிரந்தர ஆதரவையும் வேண்டி நிற்கும்.

சிறியோன்

**எஸ். முஹம்மது பஷீர்**

# பொருளடக்கம்



 

بسم الله الرحمن الرحيم

# அரபு நாட்டு சிரிப்புக் கதைகள்

## 1. திமர் ராஜா

கலீஃபா ஹாரூன் அல் ரஷீத், பக்தாதைத் தலைநகராகக் கொண்டு அரபு நாட்டை நல்லாட்சி புரிந்து வந்தார்.

அக்காலத்தில் அபுல் ஹசன் என்றொரு வாலிபன் இருந்தான்.

அவனின் தந்தை ஏராளமான சொத்துக்களை அவனுக்கு வைத்து விட்டு மரணமெய்தினார்.

அபுல் ஹசன் தன்னுடைய திரண்ட செல்வங்களை இரண்டாகப் பிரித்து, அவற்றில் ஒரு பகுதியை தனியாக வைத்து விட்டான்.

மறு பகுதியைக் கொண்டு வாழ்க்கை நடத்தினான்.

அவனிடம் பணப்புழக்கம் இருப்பது கண்டு உறவினர் களும், நண்பர்களும் அவனை எந்த நேரமும் ஈக்கள் மொய்ப்பது போல மொய்த்தார்கள்.

அவனை உல்லாசமாகச் செலவு செய்ய அவர்கள் தூண்டி னார்கள். அதில் அவர்களின் பொழுதும் இன்பமாகக் கழிந்தது. இவ்வாறு அவனுடைய செல்வத்தின் ஒரு பகுதி அழிந்தது.

தன் பணம் முழுவதும் செலவழிந்து விட்டதாக அவன் தன் நண்பர்களிடம் கூறினான். தன்னிடம் சல்லி காசுகூட இல்லா ததுபோல் அவன் நடித்தான். வறுமை வாட்டுவதுபோல காட்டிக் கொண்டான்.

அது உண்மையே என்று எண்ணிய அவனின் உற்ற நண்பர்களும், உறவினர்களும் அவனை விட்டு ஒதுங்கி விட்டனர்.

தன் வறிய நிலையினை எடுத்துரைத்து அவர்களிடம் அவன் உதவி கோரினான். ஆனால் எவரும் அவனை ஏறிட்டும் பார்க்கவில்லை. அப்பொழுது அவன் 'இதுதான் உலகம்' என்பதைப் புரிந்துகொண்டு 'இனி எவரையும் நண்பர்களாக்கிக் கொள்வதில்லை' என உறுதி பூண்டான்.

அதன் பின்னர் அவன் இரவுதோறும் புதிய ஆள் எவரையேனும் அழைத்து வந்து உணவு அளித்து அனுப்பி விடுவான். ஆனால் அந்த ஆளிடம் பழகமாட்டான்.

இந்நிலையில் ஒரு நாள், இரவு வேளையில் மன்னர் ஹாரூன் அல் ரஷீத் நகர்வலம் வந்தார். மன்னர் மாறு வேடத்தில் இருந்ததால் அவரை அவன் தன் வீட்டிற்கு அழைத்து வந்து விருந்தளித்தான்.

அப்பொழுது அவன் தன் பழைய வரலாற்றை மன்னரிடம் கூறினான். அது கேட்டு அவர் வாய்விட்டு சிரித்தார்.

பின்னர் அவர் அவனை நோக்கி "தேவை எனில் நான் உனக்கு எல்லாவிதமான உதவிகளையும் செய்வேன்" என்றார்.

அப்பொழுது அவன், "நான் இந்த நாட்டு ராஜாவாக இருந்தால் என் பக்கத்து வீட்டுக்காரனைக் கட்டி வைத்து நையப் புடைத்து விடுவேன். நான் பாட்டுப் பாடினால் அவன் சண்டைக்கு வருகிறான்" என்றான்.

அது கேட்டு சிரித்த மன்னர் அவனுக்குத் தெரியாமல் குளிர் பானத்தில் மயக்க மருந்தைக் கலந்து அவனைக் குடிக்க வைத்தார். அவனும் சற்று நேரத்தில் மயக்கமுற்றான்.

# 7

அப்பொழுது அவர் வெளியில் இருந்த தம் காவலர்களை அழைத்து, 'அவனைத் தூக்கிக் கொண்டு அரண்மனைக்குச் செல்லுமாறு' கட்டளையிட்டார்.

அரண்மனையில் அவன் முன் வராமல் மன்னர் மறைந்து கொண்டார். அவனை அனைவரும் 'மகாராஜா' என்று அழைக்க வேண்டும் என்று அவர் கட்டளையிட்டார். அவன் மயக்கம் தெளிந்து எழுந்ததும் அரண்மனையில் இருந்த அனைவரும் அவனைச் சுற்றிச் சுற்றி வந்து, ''ராஜா, மகாராஜா!'' என்று கூறினர். பணிவுடன் நின்றனர்.

அபுல்ஹசனுக்கு ஒன்றுமே புரியவில்லை. 'நான் கனவு உலகத்தில் இருக்கிறேனா? அல்லது நான் ராஜாவாக இருப்பது உண்மைதானா? என்று தனக்குள் பேசிக் கொண்டான். நேற்றிரவு என்னுடன் விருந்து சாப்பிட்டவன்தான் ஏதோ மாய சக்தியால் இவ்வாறு செய்து விட்டான் போலும்' என்றும் அவன் நினைத்தான்.

எனினும் 'பிரம்மாண்டமான அரண்மனையையும், அதில் அவன் மன்னனாக வீற்றிருப்பதையும், விலையுயர்ந்த ஆடைகளை அணிந்த நிலையில் அங்கு அனைவரும் அவன் முன் பணிவுடன் நிற்பதையும் கண்டு அவனுக்கு பெருமிதம் உண்டாயிற்று.

'தான் உண்மையில் இந்நாட்டு மன்னனே' என்பதை உறுதி செய்துக் கொண்ட அவன் அரசு காவலரை அழைத்து, ''நீ உடனே சென்று அபுல் ஹசனின் பக்கத்து வீட்டுக்காரனுக்கு ஆயிரம் கசையடி கொடுத்து 'இனி அண்டை வீட்டுக்காரனிடம் வம்புக்குப் போகாதே! என்று எச்சரித்து வா!'' என்று கட்டளையிட்டான்.

அவன் சென்றவுடன் இன்னொருவனை அழைத்து, ''நீ போய் அபுல் ஹசனின் தாயாருக்கு 1000 பொற்காசுகளைக் கொடுத்து, என் சலாமை கூறிவிட்டு வா!'' என்று உத்தரவு பிறப்பித்தான்.

# 8

அவனின் கட்டளையை ஏந்திய காவலர் மின்னல் வேகத்தில் ஓடினார்கள்.

உணவு வேளை வந்தது. உயர்வகை உணவுகளைத் தாதிப் பெண்கள் அவனுக்கு மிகவும் பணிவுடனும், கனிவுடனும் பரிமாறினர். அவன் அவற்றை வயிறார உண்டான். அவனின் பார்வையிலும், நடையிலும் ராஜா தோரணை மிளிர்ந்தது. இவை அனைத்தையும் உண்மையான மன்னர் மறைவிலிருந்து பார்த்து சிரித்துக் கொண்டார்.

பின்னர் அவர் ஒரு பணிப்பெண்ணை அழைத்து அபுல் ஹசன் அருந்தும் பானத்தில் மயக்க மருந்தைக் கலந்து கொடுக்குமாறு கூற, அவளும் அவ்வாறே செய்தாள். பானத்தைப் பருகிய அவன் மயக்கமுற்றான். அவனைத் தூக்கிச் சென்று அவனுடைய வீட்டில் விட்டு விடுமாறு மன்னர் ஏவ காவலர்களும் அவ்விதமே செய்தனர்.



அபுல்ஹசனுக்கு மயக்கம் தெளிந்தது. அப்பொழுது அவன் தன்னை 'ராஜா' என்று எண்ணிக் கொண்டு ''யாரங்கே!'' என்று அதிகாரத் தோரணையில் ஏதேதோ பேசினான். அது கண்டு அவனின் தாயார், 'மகனுக்கு பைத்தியம் பிடித்து விட்டதோ!' என்று அஞ்சினார்.

''மகனே! என்ன ஆயிற்று உனக்கு? பைத்தியம்போல் ஏதேதோ உளறுகின்றாயே!'' என்று அவர் கூறினார்.

அது கேட்டு சினமுள்ள அவன் தாயாரை அடித்தான்.

'பெற்ற தாயையே அடிக்கும் அளவிற்கு இவனுடைய பைத்தியம் முற்றி விட்டது' என்று எண்ணிய மக்கள் அவனை பைத்தியக்கார மருத்துவமனையில் கொண்டுபோய்ச் சேர்த்தனர்.

பின்னர் மனம் தெளிந்து அவன் வீட்டிற்கு வந்தான். முன் போன்றே நாள்தோறும் ஒரு வழிப்போக்கனை அழைத்து வந்து விருந்தளித்தான்.

ஒரு நாள் மன்னர் நகர்வலம் வந்து முன்போல் அவனைச் சந்தித்தார். அப்பொழுது அவன், "உன்னால் எனக்கு பைத்தியம் பிடித்தது. மோசமான ஆள் நீ!" என்று ஆத்திரத்துடன் பேசினான்.

எனினும் மன்னரோ ஏதும் அறியாதவர்போல் சிரித்தார்.

அவர் அவனை நோக்கி, "இப்பொழுது உன் அண்டை வீட்டுக்காரன் உன்னிடம் வம்புசெய்கின்றானா?" என்று வினவினார்.

"இல்லை" என்றான் அவன்.

அப்பொழுது மன்னர், "நான் இன்று உன்னுடன் உன் வீட்டிற்கு வந்து உணவருந்த விரும்புகிறேன்" என்றார்.

அது கேட்டு திடுக்கிட்ட அவன், "வேண்டாம்! வேண்டாம்! நீ சரியான தந்திரக்காரன். உன் மாய மந்திரத்தால் என் மீது பூதங்களை ஏவி விடுவாய்" என்று கூறி அலறினான்.

எனினும் மன்னர் "நான் அவ்வாறு செய்யமாட்டேன்" என்று உறுதி கூறவே அவன் அவரை தன் வீட்டிற்கு அழைத்துச் சென்றான்.

இருவரும் உணவு உண்டனர்.

அபுல்ஹசன் ஏமாந்த நேரம் பார்த்து மன்னர் ஒரு பானத்தில் முன் போன்றே மயக்க மருந்து கலந்து, அதனை அவன் அருந்து மாறு செய்தார்.

மயக்கமுற்றான் அபுல்ஹசன். மன்னர் சைக்கினை செய்தார். வெளியில் இருந்த காவலர்கள் அவனைத் தூக்கிக் கொண்டு அரண்மனைக்குச் சென்றனர்.

# 10

முன்போன்று மயக்க நிலையில் அவனுக்கு அரசரின் உடைகள் அணிவிக்கப்பட்டன; கிரீடம் சூட்டப்பட்டது. மயக்கம் தெளிந்ததும் அவனை அனைவரும் "மகாராஜா, மகாராஜா" என்று கூறியபடி வலம் வந்தனர்.

"மீண்டும் அரண்மனை, நான் மகாராஜா!" என்ன இதெல்லாம்? ஒரே குழப்பம் அபுல்ஹசனுக்கு.

"உண்மை நிலையா? அல்லது கனவுதானா?" என்று புரியாமல் அவன் விழித்தான்.

தன் நிலையைப் புரிந்துகொள்ள நினைத்த அவன் ஒரு அடிமையை அழைத்து தன்னுடைய காதைக் கடிக்குமாறு கூறி னான்.

அது கேட்ட அவன் திடுக்கிட்டு, மகாராஜா! தங்களின் காதை நான் கடிப்பது நியாயமா?" என்று கேட்டான்.

அது கேட்டு வெகுண்டெழுந்த அபுல்ஹஸன் "அடிமை நாயே; ராஜாவின் கட்டளையை எதிர்த்துப் பேசுகிறாயா? இக் கணமே உன் தலை கீழே உருளும்" என்று கூறி கூச்சலிட்டான்.

எனவே அந்த அடிமை அபுல்ஹசனின் காதைக் கடித்தான். வலியைப் பொறுக்க இயலாமல் அவன் துடித்தான். அது கண்டு அனைவரும் 'கொல்'லென்று சிரித்தார்கள்.

இது அபுல்ஹசனுக்கு அவமானமாக இருந்தது. அவனு டைய சினம் அதிகரித்தது.

அங்கிருந்த அனைவரையும் பார்த்து அவன் கூறினான்:

"சிரியுங்கள்! நன்றாகச் சிரியுங்கள்; உங்களைச் சொல்லிக் குற்றமில்லை. என்னை சிரிப்புக்குரிய ஒரு பொருளாக ஆகிய உங்கள் தலைவன் அதாவது மாயவித்தைக்காரன்-அவன் மட் டும் என் கையில் கிடைத்தால் இப்பொழுது என்ன செய்வேன் தெரியுமா?" என்று கத்தினான்.

அதைக் கேட்டதும் அங்கிருந்தோர் சிரித்தனர். மறைந்து நின்று இவற்றை வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்த மன்னரும் சிரித்தார்.

மறைவில் இருந்தவாறே அவர் "ஏ! அபுல்ஹசன்! எங்களையெல்லாம் கொன்றுவிடாதே!" என்று கூறி சிரித்தார்.

இதனைச் செவியுற்ற அவன் 'இந்தக் குரல் என்னை என் வீட்டில் சந்தித்த அதே மனிதனுடைய குரல்தான், என்று உறுதி படுத்திக் கொண்டான். மேலும் 'அவர் மன்னர்தான்; மாறுவேடத்தில் வந்துள்ளார்' என்ற உண்மையும் அவனுக்கு விளங்கிற்று.

இப்பொழுது மன்னர், அபுல்ஹசனின் முன்னால் வந்து நின்று சிரித்தார்.

அவரைக் கண்டதும் அவனின் கை, கால்கள் நடுங்கின. "மன்னர் மன்னா! என்னை மன்னித்து விடுங்கள்" என்று கூறி அவன் கெஞ்சினான்.

அப்பொழுது மன்னர், "நீ தவறேதும் செய்யவில்லையே! என்று கூறினார்.

பின்னர் அவர் அவனுக்கு மிக்க அழகுவாய்ந்த அடிமைப் பெண்ணொருத்தியைத் திருமணம் செய்து வைத்தார். அன்பளிப்பாக ஆயிரம் பொற்காசுகளையும் அவனுக்கு அளித்து அனுப்பி வைத்தார்.

## 2. முதலில் இறந்தது யார்?

அபுல்ஹசனும், அவனின் மனைவியும் கலீஃபா ஹாரூன் அல்ரஷீத் கொடுத்த பொருளைக் கொண்டு குடும்பம் நடத்தி வந்தார்கள்.

ஒரு நாள் பொருள் தீர்ந்துபோய் சல்லிக்காசுகூட கையில் இல்லாத நிலை ஏற்பட்டு சிரமப்பட்டார்கள்.

அவன் தன் மனைவியைப் பார்த்து, "நான் ஒரு யுக்தி கூறுகிறேன். அதன்படி நாம் நடந்தால் நமக்கு கலீஃபாவிட மிருந்தும், அரசி ஜுபைதாவிடமிருந்தும் அன்பளிப்பாக நிறை யப் பணம் கிடைக்கும்," என்று கூறினான்.

"என்ன அது?" என்று கேட்டாள் அவள்.

அப்பொழுது அவன் "என் கணவர் இறந்து விட்டார் என்று நீ அரசி ஜுபைதாவிடம் சொல்லி அழ வேண்டும். என் மனைவி இறந்து விட்டாள் என்று கூறி நான் கலீஃபாவிடம் அழுவேன். பிரேத அடக்கத்திற்காக அவர்கள் பணம் தருவார்கள்"என்று கூறினான்.

அதுகேட்ட அவள் அவனின் திட்டப்படியே அரசி ஜுபை தாவிடம் போய், "என் கணவர் இறந்து விட்டார்" என்று கூறி அழுதாள்.

அவளின் பரிதாப நிலையை எண்ணி அரசு ஜுபைதா மனம் இரங்கி அவளுக்கு நூறு தீனார் கொடுத்து கணவனின் பிரேதத்தை நல்லடக்கம் செய்யுமாறு கூறியனுப்பினார்.

அதே வேளையில் அபுல்ஹசன் கலீஃபாவிடம் சென்று, "அமீருல் முஃமினீன் அவர்களே! தாங்கள் எனக்கு மணமுடித்து வைத்த அழகிய பெண்ணான என் மனைவி இறந்து விட்டாள்" என்று கூறி அழுதான்.

அவனின் அழுகை அவரின் உள்ளத்தை உருக்கி விட்டது. அவனுடைய நிலையை எண்ணி வருந்தி அவனுக்கு நூறு தீனார் களை வழங்கிய அவர், அவளின் பிரேதத்தை நல்லடக்கம் செய்யு மாறு கூறினார்.

இச்செய்தியை அரசியிடம் சொல்ல விரைந்துச் சென்ற போது ஜுபைதா, கலீஃபாவை நோக்கி, "கலீபா அவர்களே! உங் களுக்கு வேடிக்கை காட்டி வந்த அபுல்ஹுசன் இறந்து விட்டான்" என்று கூறினார்.

# 13

அது கேட்டு கலீஃபா சிரித்தார்.

“இறந்தது அபுல்ஹசனின் மனைவி” என்று அவர் கூறி னார்.

“இல்லை! அபுல்ஹசன்” என்று வாதிட்டார் ஜுபைதா.

இருவருக்கும் நீண்ட நேரம் வாக்கு வாதம் நடந்தது.

பின்னர் இருவரும் ஒரு தீர்மானத்திற்கு வந்தனர்.

அதன்படி கலீஃபா ஹாரூன் அல்ரஷீத் ஓர் ஆண் அடி மையை அபுல்ஹசனின் இல்லத்திற்கு அனுப்பி, “இறந்தது யார்?” என்று அறிந்து வருமாறு ஏவினார்.

அங்கு, கலீஃபாவின் அடிமை வந்திருப்பதைப் புரிந்து கொண்ட அபுல்ஹசன் கதவைத் திறந்து, அடிமையின் முன் தன் மனைவி இறந்து விட்டதாகக் கூறி அழுதான்.

கலீஃபாவிடம் திரும்பி வந்த அடிமை, “இறந்து விட்டது அபுல்ஹசனின் மனைவிதான். இதில் ஐயம் ஏதுமில்லை” என்று கூறினான்.

இதனை கலீபாஃ அரசியிடம் கூறியபொழுது அவர் நம்ப வில்லை.

அவர் தன்னுடைய பணிப்பெண் ஒருத்தியை அபுல் ஹசனின் வீட்டிற்கு அனுப்பி உண்மையை அறிந்து வருமாறு கட்ட ளையிட்டார்.

பணிப்பெண் சென்று கதவைத் தட்டினாள்.

இப்பொழுது வந்திருப்பது அரசியின் பணிப்பெண் என்பதை அறிந்து கொண்டதும் அபுல்ஹசனின் மனைவி வந்து கதவைத் திறந்தாள். அப்பொழுது அவள் கேவிக் கேவி அழு தாள்.

## 14

"என் கணவர் இறந்து விட்டார்" என்று கூறினாள்.

இதைக் கேட்டதும், பணிப்பெண் உடனே அங்கிருந்து திரும்பி வந்து அரசி ஜுபைதாவிடம் செய்தியைக் கூறினாள்.

"அபுல்ஹசன் தான் இறந்து விட்டான்" என்று ஜுபைதா வாதிட,

"இல்லை, அவனுடைய மனைவிதான்!" என்று கலீஃபா சொல்ல, மீண்டும் இருவருக்கும் வாக்குவாதம்.

"கலீஃபாவின் ஆண் அடிமைதான் பொய் சொல்கிறான்" என்றார் ஜுபைதா.

"இல்லை. பணிப்பெண்தான் பொய்யுரைக்கின்றாள்" என்று வாதிட்டார் கலீஃபா.

பின்னர் இருவரும் ஒரு தீர்மானத்திற்கு வந்தனர். "நாம் இருவருமே நேரில் சென்று இறந்தது யார் என்று கண்டறிவோம்" என்று கூறியபின்,

ஆண் அடிமையையும், பணிப்பெண்ணையும் உடன் அழைத்துக் கொண்டு அபுல்ஹசனின் வீட்டிற்குச் சென்றனர்.

கலீஃபாவும், அரசியும் தொலைவில் வருவதைப் பார்த்து விட்ட அபுல்ஹசன்,

"நாம் இருவருமே இறந்துவிட்டதுபோல் கிடப்போம்" என்று கூறிவிட்டு, வீட்டின் வெளிக்கதவைத் திறந்து வைத்து தனித்தனியே இரண்டு போர்வைகளைப் போர்த்துக் கொண்டு படுத்துக் கொண்டார்கள்.

கலீஃபாவும், அரசியும் அந்த வீட்டினுள் நுழைந்துப் பார்த்த போது இருவரும் கால் நீட்டி படுத்துக் கிடந்தார்கள்.

கலீஃபாவுக்கு ஒன்றுமே புரியவில்லை.

அவர் அபுல்ஹசனின் காதருகே சென்று, ‘‘உங்கள் இரண்டு பேரில் முதலில் இறந்து யார் என்று தெரிவித்தால் 1000 தீனார் பரிசு தருவேன்’’ என்றார்.

அதைக் கேட்டதும் அபுல்ஹசன் துள்ளி எழுந்து, ‘‘நான் தான் முதலில் இறந்தேன். எனக்குத்தான் ஆயிரம் தீனார்’’ என் றான்.

‘‘இல்லை, இல்லை! நான்தான் முதலில் இறந்தேன். ஆயி ரம் தீனார் எனக்குத்தான்’’ என்று கூறிக்கொண்டே அவனது மனைவியும் எழுந்தாள்.

அதுகண்டு கலீஃபாவுக்குக் கோபம் வந்தது. ‘‘எதற்காக இவ்வாறு பொய் கூறினாய்?’’ என அவர் கேட்க,

அதற்கு அபுல்ஹசன், ‘‘கலீஃபா அவர்களே! என்னிடம் இருந்த பொருள் முழுவதும் செலவாகி விட்டது. இதுபோல் சொன்னால் தாங்கள் பணம் கொடுப்பீர்கள் என்றுதான் சொன்னேன்.’’ என்று சொல்லிவிட்டு,

‘‘ஆயிரம் தீனார் தருவதாகச் சொன்னீர்களே! அதனைக் கொடுங்கள்’’ என்று கூறினான்.

அவனது பேச்சைக் கேட்டு கலீஃபா ஹாரூன் அல்ரஷீத் சிரித்து விட்டார்.

உடனே ஆயிரம் தீனாரையும் அவனுக்குக் கொடுத்தார்.

அத்துடனின்றி, அன்று முதல் அவனைத் தம் அரண் மனையில் வேலைக்கும் வைத்துக் கொண்டார்.

 

# 3. மனிதன் கழுதையாக மாறிய கதை

ஒரு நாள் ஒருவன் அரபுப் பாலைவனத்தின் வழியே ஒரு கழுதையை கட்டி இழுத்துக் கொண்டு நடந்துச் சென்றான்.

அப்பொழுது அவனைக் கண்ட இரண்டு திருடர்களில் ஒருவன், ''நான் எவ்வளவு சாமர்த்தியமாக அந்தக் கழுதையை அவனிடமிருந்து கவர்ந்து விடுகிறேன் பார்'' என்று கூறினான்.

அதற்கு மற்றவன், ''அதெப்படி உன்னால் முடியும். கழுதை யைக் கட்டியிருக்கும் கயிறு அந்த மனிதனுடைய கையில் அல்லவா இருக்கிறது!'' என்று கேட்டான்.

அதற்கு முதல் திருடன், ''அதனை உன்னிடம் நான் சொல்ல மாட்டேன். நீயே நேரில் பார்ப்பாய்! என்று கூறி அந்த மனிதனின் பின்னால் மெதுவாகப் போய், மிகத் திறமையாக கழுதையின் கழுத்தில் இருந்த கயிற்றை அவிழ்த்து அதனைத் தனது கழுத்தில் கட்டிக்கொண்டு நடந்தான்.

கழுதையைத் தனது கூட்டாளியிடம் கொடுத்து அதனை ஓட்டிக் கொண்டு போகுமாறு கூறினான். அவனும் அவ்விதமே அதனை இழுத்துக் கொண்டு போய்விட்டான்.

இப்பொழுது திருடன் அந்த மனிதனுக்குப் பின்னால் கழுதையைப்போல் கழுத்தில் கயிற்றுடன் சென்று கொண்டிருந் தான்.

சிறிது தொலைவு நடந்தபின் திருடன் அந்த மனிதனின் பின்னால் செல்லாமல் நின்று விட்டான்.

திரும்பிக்கூட பார்க்காமலே இவ்வளவு தூரம் நடந்த அந்த முட்டாள், தன் கையிலிருந்த கயிற்றை பிடித்து இழுத்தான்.

இந்த கழுதைக்குத் திமிரைப் பார்த்தாயா? இழுக்க இழுக்க வராமல் அடம்பிடிக்கிறதே!'' என்று கூறியவாறு மிக்க வலுவுடன் கயிற்றை இழுத்தான்.

ம்! கழுதை நகர்ந்தபாடில்லை.

அதனை அதனை அடித்து இழுத்துச் செல்ல எண்ணி திரும்பியபொழுது அவனுக்கு பேரதிர்ச்சி ஏற்பட்டது.

அவன் இழுத்து வந்த கழுதையைக் காணவில்லை; மாறாக அவனுடைய கயிற்றுச் சுருக்கில் ஒரு மனிதனின் தலை மாட்டிக் கொண்டிருந்தது.

திருடனின் தந்திரம் அவனுக்குத் தெரியாது அல்லவா?

கயிற்றிலிருந்து விடுபட முயற்சி செய்வதுபோல திருடன் பாவனைச் செய்து திமிரினான்.

அப்பொழுது அந்த முட்டாள், ''எனது கழுதை எங்கே? எல்லாம் ஒரே அதிசயமாக இருக்கே! நீ யார்? நீ எப்படி இந்தக் கயிற்றுக்குள் வந்து சிக்கினாய்?''

அதற்குள் அத்திருடன், ''எஜமான்! என்னைத் தெரியவில்லையா? எனது கஷ்டகாலமே! நான்தான் உங்களுடைய கழுதை. எனது கதை அதிசயமானது'' என்றான்.

''என்ன சொல்கிறாய்? ஒன்றுமே புரியவில்லையே!'' என்று அந்த முட்டாள் சொல்ல,

அப்பொழுது திருடன் பின்வருமாறு தன் கதையைச் சொன்னான்.

''என் தாயார் மிகவும் வயோதிக நிலையில் இருந்தார். அவர் சிறந்த பண்புகளின் இருப்பிடமாக விளங்கினார். நான் ஒரு நாள் அளவுக்கு அதிகமாக குடித்துவிட்டு வீட்டிற்குச் சென்றேன்.

என் நிலையினைக் கண்ட என் தாய், “மகனே! இதற்கு பாவச் செயலில் நீ ஒருபோதும் ஈடுபடக்கூடாது. அல்லாஹ்விடம் தவ்பா (பாவமன்னிப்பு) கோரி திருந்திவிடு” என்று அறிவுரை கூறினார்.

குடி வெறியில் இருந்த நான் இந்த உபதேசங்களைக் கேட்க சகியாமல் ஒரு தடியால் என் தாயாரை அடித்து விட்டேன்.

பொறுமையை இழந்த அவர் என்மீது சாபமிட்டார். அல்லாஹு தஆலா அவரின் பத்துஆ (சாபத்தை)வை ஏற்று என்னைக் கழுதையாக ஆக்கிவிட்டான். அதன் பிறகு என்னை ஒருவர் உங்களிடம் விற்றுவிட உங்களுடனே இன்றுவரை மிகவும் துயரத்துடன் வாழ்ந்து வருகிறேன்.

என் தாயாருக்கு என்மீது இரக்கம் உண்டாகி அவர் அல்லாஹ்விடம் துஆ இறைஞ்சி இருப்பார் என்று கருதுகிறேன். அவன் அவரின் இறைஞ்சுதலை ஏற்று என்னை மீண்டும் மனிதனாக மாற்றியுள்ளான். இதுதான் என்னுடைய வரலாறு” என்று மிகவும் திறமையாகப் பேசினான்.

இதனைக் கேட்ட அந்த முட்டாள், அவன் சொல்வது சரியே என நம்பினான்.

அவன் அத்திருடனை நோக்கி, சகோதரனே! இறைவனை மிஞ்சிய சக்தி ஏதுமில்லை. இறைவன்மீது ஆணையாகக் கூறுகிறேன். உன்னுடைய உண்மை நிலையினை அறியாது நான் இதுநாள்வரை உன்மீது சவாரி செய்து விட்டேன். உன்னைப் பலமுறை அடித்தும் உள்ளேன். அதற்காக நீ என்னை மன்னித்துவிடு” என்று கெஞ்சினான். பின்னர் அத்திருடனை கயிற்றிலிருந்து விடுவித்துப்போக விட்டான்.

இதன் பின்னர் அந்த முட்டாள் மிக்கக் கவலையுடன் தன் வீடு போய்ச் சேர்ந்தான்.

 

தன் கணவர் கழுதை இல்லாமல் வெறுங்கையுடன் வருவதைக் கண்ட அவனின் மனைவி, ''கழுதை எங்கே! நீங்கள் மட்டும் தனியாக வருகிறீர்கள்?', என்று வினவினாள்.

அப்பொழுது அவன் நடந்தவை அனைத்தையும் அவளிடம் விவரித்தான்.

அது கேட்டு அவள் செய்வதறியாது தவித்தாள்.

''மனிதன் தான் கழுதையாக இருந்தான் என்பதை அறியாமல் அவனுக்கு எண்ணற்ற கொடுமைகள் செய்து வேதனைகளைக் கொடுத்துவிட்டோமே! அல்லாஹ்வே! எங்கள் பாவம் உண்மையிலேயே மிகப்பெரியது! நீ எங்களை மன்னித்துவிடு! உன்னுடைய தண்டனைக்கு நாங்கள் அஞ்சுகிறோம்'' என்று கண்ணீர் விட்டு அழுது இறைவனிடம் பாவமன்னிப்பு கோரினாள் அவள்.

அன்று முதல் ஏழை எளியவருக்கு தான தருமங்களைச் செய்து வந்தாள் அவள்.

கழுதையைப் பறிகொடுத்த அந்த மனிதன் வேலை ஏதும் செய்யாமலும், வருவாய் இல்லாமலும் அல்லலுற்றான்.

ஒரு நாள் அவனது மனைவி அவனை நோக்கி ''வேலை ஏதும் செய்யாமல் இவ்வாறு காலம் கழித்தால் நாம் எவ்வாறு சாப்பிடுவது? கடைத் தெருவிற்குச் சென்று புதிதாக ஒரு கழுதை வாங்கி வாருங்கள். அதனைக் கொண்டேனும் ஏதேனும் தொழில் செய்து பிழைக்கலாம்'' என்று கூறினாள்.

அவனும் அவ்விதமே பணம் எடுத்துக்கொண்டு கழுதை வாங்கச் சென்றான் கடைத் தெருவிற்கு.

அங்கு அவனுடைய கழுதையும் விற்பனைக்காக வந்திருந்தது. அதைக்கண்டு அவன் வியப்படையவில்லை. மாறாக அதன்

மீது அவனுக்கு எரிச்சல் ஏற்பட்டது.

எனவே அவன் அதன் காதருகே தன் வாயை வைத்து "தரித்திரம் பிடித்த சனியனே! மீண்டும் நீ குடித்துவிட்டு உண் தாயை அடித்து விட்டாயா? அல்லாஹ்மீது ஆணையாக இனி நான் உன்னை விலை கொடுத்து வாங்க மாட்டேன் போ!" என்று சொல்லிவிட்டுச் சென்றான்.

# 4. ஒரே நாளில் ஐந்து மனைவியரைத் தலாக் சொன்னவன்!

கலீஃபா ஹாரூன் அல்ரஷீத் காலத்தில் வாழ்ந்த விகட கவிகளில் அல்அஸ்மயீ என்பவரும் ஒருவர். அவரின் விகட கவிகளைக் கேட்டு சிரிக்காதவரே இல்லை எனலாம்.

அவர் ஒரு நாள் கலீபா ஹாரூன் அல்ரஷீதின் அரசவைக்கு வந்து அனைவரையும் சிரிக்க வைத்தார்.

அவர் கலீபாவிடம், "ஒருவன் ஒரே நாளில் ஐந்து மனைவியரைத் தலாக் கூறினான்" என்றார்.

அது கேட்டு அவையிலிருந்த அனைவரும் திருதிருவென விழித்தனர். ஒருவர் மற்றவரைப் பார்த்துக் கொண்டனர்.

அப்பொழுது கலீஃபா அவரை நோக்கி, "இது எவ்வாறு இயலும்? ஒருவன் ஒரே நேரத்தில் நான்கு மனைவியரை மட்டும் தானே மணமுடித்து வாழ முடியும்?" என்று வியப்புடன் கேட்டார்.

அஸ்மயீ கூறினர்;

"ஒருவன் தன் இல்லத்தினுள் வந்து நுழைந்தான். அப்பொழுது தன்னுடைய நான்கு மனைவியரும் ஒருவரோடொருவர் சண்டையிட்டுக் கொண்டிருந்தனர்.

அது கண்ட அவன் ஒருத்தியை நோக்கி "நீதான் இதற்கெல்லாம் காரணம். எனவே உனக்கு மணவிடுதலை (தலாக்) அளித்து விட்டேன்." என்று கூறினான்.

அதைக் கண்ட மற்றொருத்தி "இவ்வளவு அவசரப்பட்டு இவ்வாறு செய்து விட்டீர்களே!" என்றாள்.

அது கேட்ட அவன் சினமுற்று "என் விஷயத்தில் நீ அநாவசியமாக தலையிட்டு விட்டாய். எனவே உன்னையும் மணவிடுதலை (தலாக்) செய்து விட்டேன்' என்று சொன்னான்.

அப்பொழுது மூன்றாவது மனைவி குறுக்கிட்டு, "அநியாயமாக இருவருக்கு தலாக் சொல்லி விட்டீர்களே!' என்று கூறினாள்.

அதற்கவன் "நீயும் அவர்களுடன் சேர்ந்துகொள். உன்னையும் தலாக் சொல்லி விட்டேன்." என்றான்.

இதையெல்லாம் பார்த்துக் கொண்டிருந்த அவனுடைய நான்காவது மனைவி "என்ன இது அநியாயமாக இருக்கிறதே! தலாக் சொல்லாமல் அவர்களுடன் சேர்ந்து வாழ உம்மால் முடியாதா?" என்று கேட்டதுதான் தாமதம்.

உடனே அவளையும் தலாக் சொல்லி, "நீயும் அவர்களுடன் போய் சேர்ந்து தொலை!" என்று கூறி சற்று நேரத்தில் தன்னுடைய நான்கு மனைவிகளுக்கும் தலாக் கூறிவிட்டான்.

இதையெல்லாம் பார்த்துக் கொண்டிருந்த அண்டை வீட்டுக்காரி அந்த அவசரக்காரனை வாய்க்கு வந்தவாறு ஏசினாள்.

அதனால் சினமுற்ற அவன், "உன் கணவன் எனக்கு அனுமதி வழங்கினால், உன்னையும் நான் தலாக் கூறி விடுவேன்." என்று சப்தமாகச் சொன்னான்.

இதனை தன் வீட்டிலிருந்தே கேட்ட அண்டை வீட்டுக் காரன், "அவ்வாறு செய்ய உனக்கு அனுமதி வழங்கினேன்" என்று கூற,

அக்கணமே அவன், அவளை நோக்கி, "உன் கணவன் சார் பாக உன்னை நான் மண விடுதலை (தலாக்) செய்து விட் டேன்" என்று கூறினான்.

இதனை அல்அஸ்மயீ கூற கலீஃபாவும், அவையினரும் வாய்விட்டுச் சிரித்தனர்.

## 5. பொற்காசு போன்ற மகன்

ஒரு நாள் அஸ்மயீ தம் நண்பர் ஒருவருடன் சென்று கொண்டிருந்தார்.

அப்பொழுது காட்டரபி ஒருவர் வந்து, "என் மகனைப் பார்த்தீர்களா? அவனைக் காணவில்லை" என்று கூறினார்.

அது கேட்ட அஸ்மயீ, "உன் மகன் எப்படி இருப்பான்?" என்று கேட்டார்.

அதற்கு அந்த மனிதர், "பொற்காசு போல் இருப்பான்" என்று கூறினார்.

சற்று நேரத்திற்குப்பின் அம்மனிதர் அண்டங் காக்கை போன்ற கரிய நிறமுடைய ஒரு சிறுவனைத் தோளில் சுமந்த வாறு வந்தார்.

அது கண்ட அஸ்மயீ, "இவனா காணாமற் போன உம்மு டைய மகன்?" என்று வினவ,

"ஆம்!" என்றார் அவர்,

"இவனா பொற்காசு போன்றவன்? இவன் இங்குதானே என் கண் முன்னால் சுற்றிக் கொண்டிருந்தான்" என்று அஸ்மயீ கூற,

 

“காக்கைக்கும் தன் குஞ்சு பொன் குஞ்சுதானே!” என்றார் அந்தக் காட்டரபி.

# 6. அல் அமீனின் கவிதைகள்

கலீஃபா ஹாரூன் அல்ரஷீத் கல்வியாளர்களையும், அறிஞர்களையும் ஆதரித்தும் போற்றியும் வந்தார்.

அவரின் அரசவையை அலங்கரித்த கவிஞர்களுள் அபூநுவாஸும் ஒருவர். அவர் கவிஞர் மட்டுமல்லாது நகைச் சுவை மன்னராகவும் இருந்தார்.

பிறர் எழுதிய கவிதைகளில் காணப்பட்ட சிறப்புக்களைப் பாராட்டிய அபூநுவாஸ், அவற்றில் தென்பட்ட தவறுகளைச் சுட்டிக் காட்டவும் தவறியதில்லை.

சகிக்க முடியாத அளவிற்கு நயம் அற்ற பாடல்களை எவர் இயற்றினாலும் உடனே அவர் அதனைச் சுட்டிக்காட்டி விடுவார்.

ஒரு நாள் கலீஃபா ஹாரூன் அல்ரஷீதின் மகன் அல்அமீன் சில கவிதைகளை எழுதி அவற்றை அபூநுவாஸ் முன் பாடிக்காட்டி, அவரின் அபிப்பிராயத்தைக் கேட்டார்.

அவற்றில் நிறைய தவறுகள் இருப்பதாக அபூநுவாஸ் கூறவே, உடனே அவரை சிறையிலடைக்குமாறு ஆணை யிட்டார் இளவரசர் அல்அமீன்.

அவ்விதமே அபூநுவாஸ் சிறையில் அடைக்கப்பட்டார்.

செய்தி அறிந்த கலீஃபா, “எதற்காக அவறை சிறையில டைத்தாய்?” என்று கேட்க, நடந்ததைக் கூறினார் அல்அமீன்.

அதுகேட்ட சினமுற்ற கலீஃபா, அபூநுவாஸை விடுதலை செய்தார்.

சில நாட்கள் சென்றன.

மீண்டும் ஒரு நாள் அல்அமீன் வேறு சில கவிதைகளை எழுதிக் கொண்டு தம் தந்தை மற்றும் அபூநுவாஸ் முன்னால் பாடிக்காட்ட அனுமதி கேட்டார்.

கலீஃபா அனுமதி வழங்கவே அவர் தம் கவிதைகளை பாடினார்.

அவர் ஒருசில அடிகளைப் பாடியதும் அபூநுவாஸ் அங்கிருந்து புறப்படத் தயாரானார்.

அதைக்கண்ட, "கலீஃபா எங்கே போகிறீர்?" என்று வினவினார்.

அதற்கு அபூநுவாஸ், "மீண்டும் சிறைச் சாலைக்குச் செல்கிறேன்" என்றார்.

"ஏன்" என்று தெரியாமல் அனைவரும் விழித்தனர்.

"இளவரசரின் கவிதையில் பிழை இருக்கிறது. அதை நான் சொன்னால் அவர் என்னைச் சிறைச்சாலைக்கு அனுப்புவார். எனவே தான் நானாகவே முந்திக் கொள்கிறேன்" என்று அபூநுவாஸ் கூற அனைவரும் சிரித்தனர்.

# 7. மழை பெய்தால் ஒழுகும் வீடு

ஜனாஸாவைப் பின்தொடர்ந்து செல்லும்பொழுது சிரிப்பதோ, வீண்பேச்சு பேசுவதோ கூடாது. ஆனால் அபூநுவாஸின் பேச்சு அந்த இடத்திலும் பலரைச் சிரிக்க வைத்து விட்டது.

ஒரு நாள் அவர் ஒரு ஜனாஸாவைப் பின்தொடர்ந்து சென்று கொண்டிருந்தார்.

அப்பொழுது இறந்தவரின் மனைவி, "நான் என்ன செய்வேன்? இவன் இப்படிச் செய்து விட்டானே! பெண்சாதி பிள்ளை இல்லாதவன் இப்படிச் செய்து விட்டானே! தாய்,

தந்தை இல்லாதவன் இப்படிச் செய்து விட்டானே! உற்றார், உறவினர் இல்லாதவன் இப்படிச் செய்து விட்டானே! பிறப்பு, இறப்பு இல்லாதவன் உன்னைப் பிறக்க வைத்து இப்படிச் செய்து விட்டானே!'' என்று அல்லாஹ்வின் மீது அதிருப்தியுற்றவளாக பிதற்றிக் கொண்டிருந்தாள்.

பின்னர் தன் கணவரின் ஜனாஸாவை நோக்கி ''மழை பெய்தால் ஒழுகும் வீட்டிற்கு அல்லவா இப்பொழுது நீ செல் கிறாய்! அங்கு படுக்க பழைய பாய்கூட இருக்காதே! அங்கு சிறு விளக்குகூட கிடையாதே!'' உண்பதற்கு ஒரு கவளம் உணவு கூட கிடைக்காதே!'' என்று சொல்லிச் சொல்லி புலம்பினாள்.

அது கேட்ட அபூநுவாஸ் தம் அருகில் நின்றுகொண்டிருந்த ஃபக்கீரை (துறவியை)ப் பார்த்து,

''என்ன! இவள் சொல்வதைப் பார்த்தால் அவரை உன்னு டைய வீட்டிற்குத்தான் எடுத்துச் செல்கிறார்கள் போலிருக் கிறதே!'' என வேடிக்கையாகக் கூற,

அங்கிருந்த அனைவரும் சிரித்தனர்.

## 8. ஆறுமாத சிறை தண்டனை

ஒரு நாள் அபூநுவாஸ் கலீஃபா ஹாரூன் அல்ரஷீதுடன் அமர்ந்து உணவருந்திக் கொண்டிருந்தார்.

கரண்டியால் ஆணத்தை (குழம்பை) அவர் எடுத்தபொழுது அதில் ஒரு சொட்டு கலீஃபாவின் ஆடையில் பட்டு விட்டது.

அது கண்டு வெகுண்டெழுந்த கலீஃபா அபூநுவாஸுக்கு ஆறுமாதச் சிறை தண்டனை விதித்தார்.

அது கேட்டு சிறிதும் அதிர்ச்சியடையாத அபூநுவாஸ் உடனே ஆணம் முழுவதையும் கலீஃபாவின் ஆடையிலும், உடலிலும் ஊற்றி விட்டார்.

கலீஃபாவின் கண்கள் சிவக்க சிவக்க பற்களை நறநற வென கடித்தார்.

'என்ன நடக்குமோ, ஏது நடக்குமோ!' என அனைவரும் அஞ்சினர்.

ஆனால் அபூநுவாஸோ சிறிதும் அஞ்சவில்லை.

"என்ன இது?" என்று பெரும் கோபத்துடன் கலீபா கூச்சலிட,

அபூநுவாஸ் அமைதியாக "கலீபா அவர்களே! நான் தங்களின் நன்மைக்காகவே இவ்வாறு செய்தேன்" என்றார்.

"என்னுடைய நன்மைக்காக?" கலீபாவின் கேள்வியில் கோபக்கனல் தெரிந்தது.

அபூநுவாஸ் கூறினார்:

ஆம்! தங்களின் நன்மைக்காகத்தான்! ஒரு துளி ஆணம் தெறித்ததற்காக என்னை ஆறு மாத காலத்திற்கு சிறையில் அடைத்தீர் என்று மக்கள் கேள்விப்பட்டால் தங்களை கொடுங் கோலர் என்று குறை கூறுவர். ஆனால் நிறைய ஆணம் கொட்டி விட்டேன் என்பதற்காக இந்த தண்டனையை விதித்தீர் என்று மக்கள் அறிந்தால் தங்களைக் குறைகூறமாட்டார்கள். எனவே தான் இவ்வாறு செய்தேன்."

அவரது திறமையான பேச்சைக் கேட்டு கலீபா சிரித்து விட்டார்.

அத்துடன் அவருக்கு அளிக்கப்பட்ட தண்டனையையும் ரத்து செய்து விட்டார்.



 

இவ்வாறு உயிருடன் இருந்தபொழுது வேடிக்கை விகட கவிகளைச் செய்து வந்த அபூநுவாஸ் இறந்த பிறகும் வேடிக்கை காட்டினார்.

ஆம்!

ஒரு சுவரில் தம் கால்களைத் தூக்கி வைத்த வண்ணம் இறந்து விட்டார்.

மேலே தூக்கிக் கொண்டு இருந்த அவரது கால் பக்கத்தை கீழே அமுக்கினால் தலைப்பக்கம் மேலே சென்றது.

தலைப்பக்கத்தை கீழே அமுக்கினால் கால் பக்கம் மேலே சென்றது.

## 9. கனவில் கிடைத்த அன்பளிப்பு

அபூதுலாமா என்பவர் கூஃபாவில் வாழ்ந்த புகழ்பெற்ற விகடகவியாவார்.

கருப்பு அடிமையான அவர் அப்பாஸிய்ய கலீபாக்களான அஸ்ஸப்பாஹ், மன்சூர், மஹதீ ஆகியோரின் அரசவையில் விகடகவியாக விளங்கினார்.

கலீபா மன்சூர் மிகவும் சிக்கனமானவர்.

ஒரு நாள் அபூதுலாமா அரசவையில் இருந்தபொழுது தாம் இயற்றி வந்த கவிதையைப் பாட அனுமதி வேண்டினார்.

கலீபா அனுபதி வழங்கினார். அபூதுலாமா பாடத் துவங்கினார்.

“வள்ளற்கு வள்ளலான கலீபாவே!
நான் கனவு ஒன்று கண்டேன்
அதில் தாங்கள் பொற்கிழி ஒன்று
வழங்கி,

பொன்னுடையும் போர்த்தி
அனுப்பினீர்கள்
மகிழ்ச்சியுடன் திரும்பும்போது
திடீரென்று விழித்துக் கொண்டேன்
கைகளில் ஏதும் இன்றி வெறுமையாய்
இருந்தன
பொற்கிழியும் இல்லை;
பொன்னுடையும் இல்லை!
கலீபாவே!
அன்பளிப்பு பற்றிய கனவல்லவா இது!
அது பொய்யாகுமா என்று
ஐயம் எனக்கு ஏற்பட்டது
எனவே இங்கு
ஓடோடி வந்தேன்;''
என்று பாடினார்.

அது கேட்டு அவையிலிருந்தோர் அனைவரும் வயிறு குலுங்கச் சிரித்தனர்.

அப்பொழுது கலீபா மன்சூர் கவிஞரை நோக்கி, "அபூதுலாமா! இந்தத் தடவை நீர் உண்மையான கனவைத்தான் கண்டீர்! மீண்டும் ஒரு முறை இப்படிப்பட்ட கனவைக் கண்டதாகக் கூறினால் சவுக்கடிதான் கிடைக்கும்.'' என்று கூறினார்.

# 10. கிண்டல் கவிதை

ஒரு நாள் கலீபா மஹ்தீ அபூதுலாமாவை நோக்கி "இந்த அவையில் எவர் உம்முடைய கண்களுக்கு மிகவும் கேலியாகத் தென்படுகிறாரோ அவரைப் பற்றி நீர் ஒரு கிண்டல் கவிதை பாட வேண்டும். இன்றேல் உம்முடைய தலை தரையில் உருளும்'' என்று கூறினார்.

 

அது கேட்ட அபூதுலாமா செய்வதறியாமல் திகைத்தார்.

எவரைப் பற்றி கிண்டல்செய்து கவிதை பாடுவது? அவ்வாறு பாடினால் அந்த மனிதர் இவரை சும்மா விடுவாரா?

தம் கண்களை அங்குமிங்கும் சுழல விட்டுப் பார்த்தார் அபூதுலாமா.

எவரையும் கேலி செய்ய முடியாது.

அங்கிருந்த ஒவ்வொருவரும் "எங்களைக் கிண்டல் செய்தால் உம்மைக் கொன்று விடுவோம்" என்று நயன மொழியால் அச்சுறுத்தினர்.

எனவே அவர் கலீபாவை நோக்கி "கலீபா அவர்களே! இங்குள்ள எவரையும் கிண்டல் செய்து பாட முடியும் என்று நான் கருதவில்லை. காரணம் ஒவ்வொருவரும் என்னை எரித்து விடுவதுபோல் பார்க்கின்றனர். ஆகவே இங்குள்ளோரின் ஒருவனான என்னையே நான் கிண்டல் செய்து பாடுகிறேன்" என்று கூறி பின்வருமாறு பாடினார்

"அபூதுலாமா!
நீ மேட்டுக்குடி மக்களுள் ஒருவனல்ல
உனக்கு என்ன சிறப்பு இருக்கிறது?
தலைப்பாகையை நீ அணிந்தால்
பார்வைக்குக் குரங்குபோல் தெரிகிறாய்
தலைப்பாகையைக் கழற்றிடின்
நீ ஒரு முள்ளம் பற்றிதான்!
அவலட்சணங்களின் அடைக்கலம் நீ!
மடமைகளின் தாயகம் நீ
நீ வாழப்போவதோ சொற்பமான நாட்கள்!
சுகங்களை தேவையான மட்டும்
அனுபவித்துக் கொள்;

 

மறுமை நிச்சயம் வரத்தான் போகிறது
அப்பாழுது உன் தலைவிதிப்படி
தண்டனையை அனுபவிக்கத்தான் வேண்டும்!''

இந்தப் பாடலைக் கேட்டு கலீபாவும், மற்றோரும் வயிறு குலுங்கச் சிரித்தனர்.

அபூதுலாமாவின் சமயோசித அறிவைப் பாராட்டி பரிச ளித்தார் கலீபா மஹ்தி.

# 11. நோயாளியை விசாரிக்கச் சென்ற செவிடன்

மௌலானா ரூமி (ரஹ்) அவர்களின் 'மஸ்னவி'யில் பல வேடிக்கையான நிகழ்ச்சிகள் காணப்படுகின்றன. அவற்றுள் ஒன்றை இங்கே பார்ப்போம்.

ஒரு செல்வந்தர் ஒரு செவிடரிடம், ''என்னப்பா உன்னு டைய அண்டை வீட்டுக்காரர் நோயுற்று படுத்த படுக்கையாக கிடக்கிறார். அவரை நீ இதுவரை சென்று விசாரிக்கக்கூட இல்லையே!'' என்று கூறினார்.

அதற்கு அச்செவிடர்,

''உண்மைதான் போய் பார்க்க வேண்டும்'' என்று கூறினார்.

இவ்வாறு கூறியபின் அவர் ''நானோ செவிடன் அவரிடம் போய் எவ்வாறு நலன் விசாரிப்பேன்? இருப்பினும் அவரோ என் அண்டை வீட்டுக்காரர்; அவர் நோயுற்று இருக்கும்பொழுது சென்று விசாரிக்காமல் இருப்பது நல்லதல்ல. அவர் ஈனக் குரலில் பேசுவார். அது என் காதில் விழாது. எவ்வாறு விளங்கிக் கொண்டு அவருக்கு நான் பதில் சொல்வது?'' என்று தமக்குத் தாமே கூறிய வண்ணம் தயங்கினார்.

பின்னர் அச்செவிடர் ஒரு தீர்மானத்திற்கு வந்தவராக,

"அவரின் உதட்டு அசைவிலிருந்து அவர் என்ன சொல்கிறார் என்பதை விளங்கிக் கொண்டு நான் பதிலுரைப்பேன்.

நான் அவரிடம் சென்றவுடன் 'நண்பரே! எப்படி இருக்கிறீர்?' என்று கேட்பேன்.

அதற்கவர், 'நலமாக இருக்கிறேன். நன்றி! என்பார்.

உடனே நான், 'எல்லாப் புகழும் அல்லாஹ்வுக்கே உரியது.' என்பேன்.

பின்னர், 'என்ன மருந்து சாப்பிடுகின்றீர்?' என்று கேட்பேன்.

அதற்கவர், 'ஷர்பத்தும், பட்டாணி ரசமும் சாப்பிடுகிறேன்" என்று சொல்வார்.

அப்பொழுது நான், 'அது உடல் நலத்திற்கு நல்லது ஆயிற்றே' என்று கூறுவேன்.

அதற்குப்பிறகு நான், 'எந்த மருத்துவரிடம் மருந்து உட்கொள்கிறீர்?' என்று வினவுவேன்.

உடனே அவர், 'இன்னாரிடம்' என்று மருத்துவரின் பெயரைத் தெரிவிப்பார்.

அப்பொழுது நான், 'அப்படியா? அவர் மிகச் சிறந்தவராயிற்றே! உமக்கு நிச்சயமாக உடல்நலம் பெறும்' என்று நான் நவில்வேன்"

இவ்வாறு அந்தச் செவிடர் தமக்குத் தாமே ஓர் ஒத்திகையை நடத்திக்கொண்டு, நோயாளியைக் காணச் சென்றார்.

அண்டை வீட்டினுள் செவிடர் நுழைந்தார். அங்கு மிகவும் மோசமான நிலையில் நோயாளி படுத்திருந்தார்.

 

அவரைக் கண்ட செவிடர், "நண்பரே! எப்படி இருக்கிறீர்?" என்று கேட்டார்.

வேதனையின் உச்சத்தில் இருந்த நோயாளி பேசவும் முடியாத நிலையில் முக்கி முனகியவாறு, 'ம்! செத்துக்கொண்டே இருக்கிறேன்' என்று கூறினார்.

அவர் என்ன கூறுகிறார் என்பதை விளங்கிக் கொள்ளாத செவிடர் முன்பே ஒத்திகை பார்த்தது போன்றே, "எல்லாப் புகழும் அல்லாஹ்வுக்கே உரியது' என்று கூறினார்.

அது கேட்டு நோயாளி திடுக்கிட்டார்.

"இவன் நம்முடைய பகைவன். எனவேதான் இவ்வாறு கூறுகிறான்." தம் மனத்திற்குள் நினைத்துக் கொண்டார்.

பின்னர் செவிடர், நோயாளியை நோக்கி, "என்ன சாப்பிடு கிறீர்கள்?" என்று வினவினார்.

அதற்கவர் "நஞ்சைத்தான் சாப்பிடுகிறேன்" என்று எரிச்சலுடன் கூறினார்.

உடனே செவிடர் "அது உடம்புக்கு நல்லது" என்று சொன் னார்.

அது கேட்ட நோயாளி கடுங்கோபத்துடன் 'நல்லதா! அடப்பாவி" என்று கத்தினார்.

இதுகூட செவிடர் காதில் விழவில்லை.

இதன் பின்னர் அவர் நோயாளியைப் பார்த்து,

"எந்த மருத்துவரிடம் மருந்து சாப்பிடுகிறீர்கள்?" என்று வினவ,

"இஸ்ராயீலிடம் (எமனிடம்)" என்று கூறிவிட்டு "போ வெளியே!" என்று அலறினார்.

ஆனால் செவிடரோ, 'இவர் ஏதோ ஒரு மருத்துவரின் பெயரைத்தான் கூறுகிறார்' என எண்ணிக்கொண்டு

"அப்படியா? அவர் சிறந்த மருத்துவராயிற்றே! மிகவும் மகிழ்ச்சி" என்று கூறிவிட்டு நடையைக் கட்டினார்.

நோயாளிக்கு ஏற்பட்ட சினத்திற்கு அளவே இல்லை.

"கெட்ட பயல்! இப்படிப்பட்ட கொடிய பகைவனாக இருப்பானென்று நான் நினைக்கவே இல்லை" என்று சொல்லிப் பொருமினார்.

## 12. கர்ண கொடூர பாங்கோசை

மிகவும் அருவருப்பான குரலில் பாங்கு சொல்லும் முஅத் தின்களைப்பற்றி இமாம் ஷைகு சஅதீ (ரஹ்) அவர்கள் தங்களின் 'குலிஸ்தானில்' குறிப்பிட்டுள்ள நிகழ்ச்சி ஒன்றைப் பார்ப்போம்.

குராசான் நாட்டுத் தலைநகரான ஸஞ்சரில் உள்ள பள்ளி வாயில் ஒன்றில் மோதினார் ஒருவர் இருந்தார். அவரை தற்காலிக வேலைக்காக நியமித்திருந்தார்கள்.

அவரின் பாங்கு சொல்லும் முறை கேட்பதற்கு அருவருப் பாக, காதில் ஈயத்தைக் காய்ச்சி ஊற்றுவதுபோல் இருந்தது.

இதனால் மக்கள் அப்பள்ளிக்குத் தொழுவதற்கு பதிலாக, பள்ளியிலிருந்து வெளியே வெருண்டோடினார்கள்.

பேயோ, பிசாசோ அலறுவது போலிருந்தது, அவர் சொன்ன பாங்கு.

இதனால் வெறுப்புற்ற பள்ளி நிர்வாகிகள் அந்த முஅத் தினை அழைத்து,

"இந்த பள்ளிவாயிலில் இதற்கு முன் முஅத்தினாக பணியாற்றியவர் வந்து விட்டார். அவருக்கு மாதச் சம்பளம் ஐந்து

தீனார் தாம். நீர் சில நாட்கள் மட்டுமே வேலை செய்துள்ளீர். எனினும் உமக்கு பத்து தீனார் தருகிறோம். அதனைப் பெற்றுக் கொண்டு சென்றுவிடும்!'' என கூறினார்கள்.

அது கேட்ட அவர், 'தம்முடைய பணியைப் பாராட்டித்தான் நிர்வாகிகள் மகிழ்ச்சியுடன் இவ்வாறு செய்கின்றனர் என்று எண்ணியவாறு பத்து தீனாரைப் பெற்றுக்கொண்டு தன்வழியே சென்றார்.

பின்னர் அவர் வேறொரு பள்ளிக்குச் சென்று மோதினா ராகப் பணியாற்றினார்.

சில நாட்கள் கழித்து தாம் வேலை செய்த பழைய பள்ளி யின் நிர்வாகிகளைச் சந்தித்த அவர், ''தாங்கள் பத்து தீனார் கொடுத்து என்னை போகச் சொன்னீர்கள். அது அநியாயம். நான் இப்பொழுது ஒரு பள்ளியில் முஅத்தினாகப் பணியாற்றி வருகிறேன். அவர்களும் என்னை வேலையை விட்டு விட்டுச் செல்லுமாறு கூறுகிறார்கள்; நான் அவ்வாறு செல்வதானால் இருபது தீனார் தருவதாகச் சொல்கிறார்கள். நான் ஒப்புக் கொள்ளவில்லை'' என கூறினார்.

அது கேட்டு பள்ளி நிர்வாகிகள் சிரித்துவிட்டு ''அவர்கள் உம்மை ஏமாற்றப் பார்க்கிறார்கள். ஏமாந்து விடாதீர். சற்று உறுதி யாக இருப்பின் உமக்கு ஐம்பது தீனார் கொடுத்து போகுமாறு சொல்வார்கள். அறிவோடு செயல்படும்!'' என கூறினர்.

ஆனால் மோதினாருக்கு விளங்கவில்லை. அவர் அங்கிருந்து சிந்தித்துக்கொண்டே சென்றார்.

## 13. கால் முறிந்த கதை

போரில் ஈடுபட்ட ஒருவருக்கு காலில் பலமான வெட்டுக் காயம் ஏற்பட்டது. இதனால் கால் துண்டிக்கப்படும் நிலை

உண்டாகி மரத்தால் கால் செய்யப்பட்டு அவருக்கு இணைக்கப் பட்டது. செயற்கை கால் மூலம் அவர் இங்குமங்கும் நடந்து வாழ் நாளைக் கடத்தி வந்தார்.

ஒரு நாள் அவர் தம் இல்லத்திலிருந்து புறப்பட்டுச் சென் றார். அப்பொழுது வேகமாக வந்த குதிரை வண்டி ஒன்று எதிர் பாராதவிதமாக அவர்மீது மோதிவிட்டது.

கீழே விழுந்த அவரின் ஒரு கால் மீது வண்டிச் சக்கரம் ஏறிவிட்டது.

அது கண்டு அதிர்ச்சியுற்ற வண்டிக்காரரும், பயணியும் செய்வதறியாது திகைத்தார்கள்.

அடிபட்ட அந்த மனிதரோ எழுந்து நிற்க முடியாமல் தவித் தார்.

“என்னை என்னுடைய இல்லத்திற்கு தூக்கிக்கொண்டு செல்லுங்கள்” என அவர் அலறினார்.

அது கேட்ட வண்டிக்காரரும், பயணியும் “ஐயா உமக்கு காலில் பலத்த அடிபட்டிருக்கிறது. எனவே உம்மை வண்டியில் அமர்த்தி உடனே மருத்துவரிடம் கொண்டு செல்கிறோம்” என கூறி அவரைத் தூக்கினர்.

அதற்கு அம்மனிதர் எரிச்சலுற்று “எனக்கு இப்பொழுது மருத்துவர் தேவை இல்லை; ஒரு தச்சன்தான் தேவை” என்றார்.

வண்டிக்காரருக்கும், பயணிக்கும் ஏதும் விளங்கவில்லை. மரத்தால் ஆன அவரின் செயற்கை கால்தான் உடைந்திருந்தது.

# 14. கைதான் திருடியது

கன்னம் வைத்துத் திருடுவதில் கைதேர்ந்த திருடன் ஒருவன் இருந்தான்.

ஒரு நாள் அவன் ஒரு வீட்டினுள் புகுந்து கன்னம் வைத்து நகைப்பெட்டி ஒன்றைத் திருடிக் கொண்டு வெளியே வந்தான்.

எனினும் இரவுக் காவலர்களிடம் அவன் வசமாகச் சிக்கிக் கொண்டான்.

காவலர்கள் அவனை நீதிபதியின் முன் கொண்டுச் சென்று நிறுத்தினார்கள்.

திருடனோ 'ஓ'வென்று அழுதான்.

"ஐயா! நான் நேர்மையானவன்! பரம ஏழை! நான் எந்தத் தவறையும் செய்யவில்லை. என் வலது கைதான் அந்த வீட்டில் கன்னம் வைத்துத் திருடியது. நானோ வெளியில்தான் நின்று கொண்டிருந்தேன். எனவே நான் குற்றமற்றவன். என்னை மன்னிக்க வேண்டுகிறேன்" என கூறி அவன் வாதிட்டான்.

அது கேட்ட நீதிபதியும், மற்றவர்களும் சிரித்தார்கள்.

'அதிசயமான திருடனடா இவன்! என எண்ணிய நீதிபதி அத்திருடனை நோக்கி,

"நீ சொல்வது உண்மைதான். இத்திருட்டை நீ செய்ய வில்லை என்றும் உன்னுடைய வலது கைதான் செய்தது என்றும் நீ கூறுகிறாய். அதனை நான் ஏற்றுக் கொள்கிறேன். எனவே உனது வலது கைக்கு ஐந்து ஆண்டு காலம் கடுங்காவல் தண்டனை விதிக்கிறேன். உன் கை குற்றமிழைத்தபோது நீ வெளியில் நின்றுகொண்டிருந்தது போன்றே அக்கை சிறை தண்டனை அனுபவிக்கும் பொழுதும் நீ வெளியில் நின்று கொண்டிரு!" என தீர்ப்பு வழங்கினார்.

திருடனுக்கோ தேள் கொட்டியதுபோல இருந்தது.

 

# 15. உணவை மோப்பம் பிடித்த கூலிக்காரன்

கூலிக்காரன் ஒருவன் சாப்பாட்டுக் கடை ஒன்றின் அருகில் போய் நின்றுகொண்டு அங்கு சமைக்கப்படும் உணவுப் பொருள் களின் வாசனையை மோப்பம் பிடித்துக் கொண்டிருந்தான்.

பிரியாணி, கறி வறுவல், மீன் பொறியல், இரால் ஆணம் என உணவுகளின் வாசனை கமழ்ந்து கொண்டிருக்க அதனை மோப்பம் பிடித்துக் கொண்டே அவன் நீண்ட நேரமாக நின்று கொண்டிருந்தான்.

சாப்பாட்டுக் கடைக்குள் அவன் வரவுமில்லை; அந்த இடத்தை விட்டு நகரவுமில்லை.

அது கண்ட கடைக்காரன் அந்த கூலிக்காரனின் அருகிற் சென்று "உணவுகளின் வாசனை எப்படி இருக்கிறது?" என வினவினான்.

அதற்கு அவன் "ஆஹா! ரொம்ப பிரமாதம்! இது போன்ற வாசனையை நான் இதுவரை முகர்ந்தது இல்லை" என வாயாரப் புகழ்ந்தான்.

அது கேட்ட கடைக்காரன் "அப்படியானால் நீ என் உணவு பதார்த்தங்களை முகர்ந்ததற்கு விலை கொடுக்க வேண்டும்" என்றான்.

அது கேட்டு கூலிக்காரன் திடுக்கிட்டான்.

"சாப்பாட்டை முகர்வதற்கும் பணம் தர வேண்டுமா?" என்று கேட்டான்.

"ஆம்! கண்டிப்பாக பணம் கொடுத்த ஆக வேண்டும். இல்லாவிடின் நான் உன்னை விடப்போவதில்லை" என்று வாதிட்டான்.

“வேடிக்கையாக இருக்கிறதே! உன்னுடைய பேச்சு!” என்று கூறிய கூலிக்காரன் தன்னுடைய சட்டைப் பையிலிருந்து இரண்டு வெள்ளிக்காசு (திர்ஹம்)களை எடுத்து அவற்றைத் தட்டினான்; காசுகள் ஒலித்தன.

“காசுகளின் ஓசை காதில் விழுந்ததா?” என்று அவன் கேட்டான்.

அதற்கு அந்த சாப்பாட்டுக் கடைக்காரன் “காதில் விழுந் தது” என்று கூறினான்.

அது கேட்ட அந்த கூலிக்காரன் “நான் உன்னுடைய உண வுப் பதார்த்தங்களின் வாசனையை என் மூக்கால் முகர்ந்த தற்கும், நீ என்னுடைய பணத்தின் ஓசையை உன் காதால் கேட்டதற்கும் சரியாகப் போய்விட்டது போ!” என்று ஏளனமாகச் சொல்லி விட்டு வந்த வழியே போய்விட்டான்.

## 16. கனவும், கற்பனையும்

சுல்தான் என்னும் பெயருள்ள சோம்பேறி ஒருவன் இருந் தான். எந்த வேலையும் செய்யாமல் அவன் கற்பனை செய்தும் கனவுகள் கண்டும் பொன்னான தன் வாழ்நாளை வீணாக்கி வந்தான்.

இரவு நேரங்களில் பிச்சை எடுத்து உணவு உண்பான்.

ஒரு நாள் திடீரென்று அவனின் தந்தையார் இறந்து விட்டார். எழுநூறு வெள்ளிக்காசுகளை விட்டுச் சென்றார்.

ஏழு சகோதரர்களும் அதனை பங்கு பிரித்துக் கொண்ட போது சுல்தானுக்கும் நூறு வெள்ளிக் காசுகள் கிடைத்தன.

தன் பங்குக்குக் கிட்டிய பணத்தைக் கொண்டு அவன் கண் ணாடிப் பொருள்களை வாங்கி வாணிபம் செய்யத் துவங்கி னான்.

ஒரு நாள் அவன் அக்கண்ணாடிப் பொருள்களை ஒரு கடையில் வைத்து விட்டு அமர்ந்திருந்தான்.

அப்பொழுது அவன் தன் எதிர்காலத்தைப் பற்றிக் கற்பனை செய்யலானான்.

“நூறு வெள்ளிக்காசுகளைக் கொண்டு வாங்கிய இந்தப் பொருள்களை விற்றால் இருநூறு காசுகள் கிடைக்கும். அதைக் கொண்டு பொருள்களை வாங்கி விற்றால் நானூறு கிடைக்கும். இதேபோல படிப்படியாக முன்னேறினால் என்னைவிட பெரிய பணக்காரன் வேறு எவரும் இருக்க முடியாது.”

“பின்னர் நான் நிக்காஹ் செய்து கொள்வேன்
சாதாரணப் பெண்ணை மணமுடிக்க மாட்டேன்
மந்திரியின் மகளைத்தான் மணமுடிப்பேன்
அப்படியே மணமுடித்தாலும் அவளை ஏறெடுத்தும்
பார்க்க மாட்டேன்.
அதைக்கண்டு என் மாமனாரும், மற்றவர்களும்
என்னிடம் பணிவுடன் வந்து
சமாதானம் பேசுவார்கள்.
அப்பொழுதும் நான் அவளைச் சட்டை செய்ய மாட்டேன்.
நான் பள்ளியறையில் இருக்கும்பொழுது
என் மனைவி
என்னிடம் வந்து கொஞ்சுவாள்; கெஞ்சுவாள்.
பழரசக் கிண்ணத்தை என் வாய் அருகில்
கொண்டு வந்து குடிக்கச் சொல்லி
மன்றாடுவாள்.
நான் கோபமாக அவளின் கையைத் தட்டி
அவளையும் காலால் உதைப்பேன்

என்று தன்னையும் மறந்து தன் எதிரில் இருந்த கண்ணாடிக் கூடையைக் காலால் எட்டி உதைத்தான்.

நூறு வெள்ளிக் காசுகள் விலையுள்ள கண்ணாடிப் பொருட்கள் யாவும் உடைந்து சுக்கு நூறாயின.

சப்தம் கேட்டு கண் திறந்த அவன் அங்கு அனைத்தும் உடைந்திருப்பதைக் கண்டு தலையில் கையை வைத்துக் கொண்டு அழுதான்.

## 17. பெண் புத்தி பின் புத்தி

பாரசீக மன்னர் குஸ்ரு ஒரு நாள் அரண்மனை மேல் மாடியின் அத்தாணி மண்டபத்தில் தம் மனைவி அளவளாவிக் கொண்டிருந்தார்.

கீழே வீதியில் செம்படவன் ஒருவன் பெரிய மீன் ஒன்றை தூக்கிக்கொண்டு செல்வதை அவர் கண்டார்.

மீன் உண்பதில் மிகுந்த விருப்பம் உடையவராயிருந்த அவர் தன் ஏவலர்களை அனுப்பி அச் செம்படவனை அழைத்து வருமாறு பணித்தார்.

செம்படவன் மீனுடன் வந்தான்.

அந்த மீனைக் கண்டு, அதனைச் சமைத்து உண்ண விரும்பிய அவர் விலை கேட்காமலும், பேரம் பேசாமலும் செம்படவனுக்கு நாலாயிரம் தீனார் கொடுக்கும்படி உத்தரவிட்டு அதனைப் பெற்றுக் கொண்டார்.

அது கண்டு முகம் சுளித்த அவரின் மனைவி ஷீரின், 'ஏன் இத்தகைய தகாத செயலைச் செய்தீர்கள்?'' என கேட்டாள்.

''ஏன் அப்படிச் சொல்கிறாய்?'' என்று வினவினார் மன்னர்.

 

அதற்கவள் "நாம் நம் ஊழியர்களுக்கு அவர்களின் ஊழியத்திற்கு ஏற்ற சம்பளம் தானே வழங்குகிறோம். அதே போன்று இந்த மீனுக்கு உரிமை விலையைத்தானே நாம் கொடுக்க வேண்டும். கண்மூடித்தனமாக நாலாயிரம் தீனார் தர வேண்டுமா?" எனக் கேட்டாள்.

அரசர் சிந்தித்தார்.

அவரின் மனைவி தொடர்ந்து, "இதே நாலாயிரம் தீனாரை சம்பளமாக நாம் நம் ஊழியர்களுக்குக் கொடுப்பின் அவர்கள் அதிருப்தி அடைந்து, 'கேவலம் ஒரு செம்படவனுக்குக் கொடுத்த அளவு தொகையைத்தானே அரசர் நமக்குக் கொடுத்தார்' என்று கூறித் தங்களை இகழ்ந்துரைப்பார்கள். அதனைக் காட்டினும் குறைவாகக் கொடுப்பின் செம்படவனுக்குக் கொடுத்ததைவிட குறைவாகத்தானே நமக்கு கொடுத்தார் என்று குறைபட்டுக் கொள்வார்கள்" என கூறினாள்.

அது கேட்ட குஸ்ரு மன்னர், "நீ சொல்வது உண்மைதான். எனினும் கொடுத்துவிட்ட வெகுமதியைத் திரும்பப் பெற்றுக் கொள்வது அரசர்களுக்கு அழகல்லவே!" என கூறினார்.

அதனைச் செவிமடுத்த அவள், "அதற்கு ஒரு தந்திரம் செய்வோம்; அதன் மூலம் நாம் கொடுத்த வெகுமதியைத் திரும்பப் பெற்றுக் கொள்ளலாம்!" என்றாள் அவள்.

"அதெப்படி?" என்று அவர் வினவ,

"செம்படவனை அழைத்துவரச் சொல்லுங்கள். அவன் வந்ததும், நீ கொடுத்தது ஆண் மீனா? பெண் மீனா? என கேளுங்கள்.

அவன் 'பெண் மீன்' என்று சொன்னால் 'எனக்கு ஆண் தான் வேண்டும்' என சொல்லுங்கள்.

அவன், 'அது ஆண் மீன்' என்று கூறினால் எனக்கு பெண் மீன்தான் வேண்டும்' என சொல்லுங்கள்.

இவ்வாறு கூறி அவனிடமிருந்து வெகுமதியைப் திரும்பப் பெற்றுக் கொண்டு மீனைக் கொடுத்துவிட வேண்டும். பின்னர் அவன் அதனை எடுத்துக்கொண்டு வீதியில் செல்லும் பொழுது நமது ஊழியனை அனுப்பி அதற்குரிய விலையைக் கொடுத்து வாங்கிவிட வேண்டும்'' என அவள் யுக்தி கூறினாள்.

அவள் கூறியது மிகவும் நல்ல யுக்தியாக அவருக்குத் தோன்றியது.

அரசர் ஆணையிட, செம்படவன் அழைத்து வரப்பட்டான்.

அப்பொழுது அவள் அவனைப் பார்த்து, ஏனப்பா! நீ கொடுத்த மீன் ஆணா அல்லது பெண்ணா?'' என்று கேட்டார்.

இந்த கேள்வியை செவியுற்றதும், செம்படவன் சுதாரித்துக் கொண்டான்.

'ஓஹோ, நம்மிடம் உள்ள நாலாயிரம் தீனாரை அபகரித்துக் கொள்ளவே அரசர் திட்டமிடுகிறார்' என்பதைப் புரிந்து கொண்டான்.

எனவே அவன் தந்திரமாக, ''மாண்புமிகு அரசே! இந்த மீன் ஆண் மீனுமல்ல; பெண் மீனுமல்ல; இது ஒரு அலி மீன்'' என விடையளித்தான்.

இந்த வார்த்தையைக் கேட்டு மன்னர் குஸ்ரு வாய் விட்டு உரக்கச் சிரித்தார்.

பின்னர், 'மேலும் நாலாயிரம் தீனார் வெகுமதியை அவனுக்கு வழங்குமாறு, தம்முடைய கருவூலக் காப்பாளருக்கு உத்தரவிட்டார்.

அதன்படி அவனுக்கு நாலாயிரம் தீனார் வழங்கப்பட்டது.

எட்டாயிரம் தீனார்கள் கொண்ட தோல் பையைத் தூக்கிக் கொண்டு செம்படவன் புறப்பட்டான்.

அரண்மனையை விட்டு அவன் வெளியேறிச் சென்றபோது அந்தப் பையிலிருந்து ஒரு தீனார் கீழே விழுந்து விட்டது.

எனவே அவன் தன் தோள் மீதிருந்த பையைக் கீழே இறக்கி வைத்து, கீழே விழுந்த பொன் நாணயத்தைத் தன் கையில் எடுத்துக் கொண்டான்.

இதனை மன்னரும், அவரின் மனைவியும் பார்த்தார்கள்.

அப்பொழுது அவள், மன்னரை நோக்கி, "அரசே! இந்த செம்படவனின் கஞ்சத்தனத்தைப் பார்த்தீர்களா? அரண்மனை ஊழியர்கள் எவரேனும் எடுத்துக் கொள்ளட்டுமே என்று அந்த நாணயத்தை விட்டு விடாமல் தாங்கள் அளித்த வெகுமதியைத் தரையில் இறக்கி வைத்து விட்டு அற்பத்தனமான அந்நாண யத்தைப் பொறுக்கி எடுக்கின்றான்" என குத்தலாகக் கூறினாள்.

அது கேட்டு சினமுற்ற மன்னர், "நீ சொல்வது முற்றிலும் சரிதான்" என்று தன் மனைவியான அரசியைப் பாராட்டி விட்டு,

"இழுத்து வாருங்கள் அந்தச் செம்படவனை!" என்று ஆணையிட்டார்.

செம்படவன் வந்தான். மன்னருக்குப் பணிவுடன் சலாம் உரைத்தான்.

அவனைக் கண்ட மன்னர் "ஏ வெட்கங் கெட்டவனே! மனி தன் என்று சொல்வதற்குத் தகுதி அற்றவனே! நான் வழங்கிய அன்பளிப்பை தோள் மீதிருந்து தரையில் இறக்கி வைத்துவிட்டு கீழே விழுந்த ஒரு நாணயத்தை பொறுக்குகின்றாயே! அதனை போனால் போகிறது என்ற விட்டுவிடக் கூடாதா? எத்துணைப் பேராசை உனக்கு!" என்று வாய்க்கு வந்தவாறு ஏசினார்.

 

அது கேட்ட செம்படவன் மிக்க பணிவுடன், "பேரரசே அல்லாஹ் தங்களுக்கு நீண்ட ஆயுளைத் தருவானாக! இந்த நாணயங்களை நான் பெரிதாக மதிப்பதால் தான் தரையில் விழுந்த அதனை கீழே குனிந்து எடுத்தேன். நாணயத்தின் ஒரு புறத்தில் அரசாங்க முத்திரையும், மறுபுறத்தில் தங்களின் உருவமும் பொறிக்கப்பட்டுள்ளன. தரையில் விழுந்த இதனை எவரேனும் தம் காலால் மிதித்து விடக்கூடும். இதனால் தங்களையோ அல்லது தங்கள் அரசாங்கத்தையோ அவமதித்த குற்றம் ஏற்படும். எனவேதான் நான் அவ்வாறு செய்தேன். என் செயலில் குற்றமிருப்பின் தயவு கூர்ந்து என்னை மன்னிக்க வேண்டும்" என கூறினான்.

அவனின் பேச்சைக்கேட்டு பெரிதும் மகிழ்ந்த மன்னர் குஸ்ரு, அவனைப் பாராட்டினார்.

மேலும் அவனுக்கு நாலாயிரம் தீனார் சன்மானம் வழங்க உத்திரவிட்டார்.

பின்னர் முரசு அறைவோனை அழைத்து, "பெண்களின் ஆலோசனைப்படி எவரும் நடக்க வேண்டாம். அவர்களின் யோசனையைக் கேட்டு அதன்படி செயலாற்றுபவன் மூன்று மடங்கு இழப்பை அடைவான்" என்று நாடு முழுவதும் அறிவிக்கச் சொன்னார்.

## 18. இலக்கண ஆசிரியரின் போலித்தனம்

எழுதவோ படிக்கவோ தெரியாத ஒருவன் தன்னை இலக்கண ஆசிரியன் போல் பலரிடம் காட்டிக் கொண்டான். அறிஞர்களின் கூட்டத்தில் கலந்து கொண்டு மக்களை ஏமாற்றி வயிறு பிழைத்து வந்தான்.

ஒரு பள்ளிக்கூடம் திறந்து நடத்தினால் மக்களிடையே தனக்குப் பேரும், புகழும் கிடைக்கும் என்று கருதிய அவன் அவ்விதமே செய்தான்.

கரும்பலகைகளையும், ஓலைச் சுவடிகளையும் சேகரித்து அவற்றை சுவரில் தொங்கவிட்டான்.

பின்னர் அறிஞர்களைப் போன்றே, தானும் தலைப்பாகை கட்டிக்கொண்டு, கதவின் அருகில் போய் அமர்ந்து கொண் டான்.

அவ்வழியே செல்வோர் அவனையும் அவனின் தலைப் பாகையையும், பலகைகளையும், ஓலைச் சுவடிகளையும் கண்டு அவன் ஒரு கல்விமான் என்று எண்ணி தங்களின் பிள்ளைகளை கல்வி பயில அவனிடம் அனுப்பி வைத்தனர்.

இவ்வாறு குழந்தைகள் சேரச் சேர அவனுக்கு ஏற்பட்ட மகிழ்ச்சிக்கு அளவே இல்லை.

அவன் ஒரு பிள்ளைப் பார்த்து, ‘படி’ என்பான்.

மற்ற சிறுவனைப் பார்த்து ‘நீ எழுது!’ என கூறுவான்.

இவ்விதமாக சிறுபிள்ளைகள் தங்களுக்குத் தெரிந்தவற்றை மற்ற பிள்ளைகளுக்கு சொல்லிக் கொடுத்தனரே அன்றி அந்த போலி வாத்தியார் எதுவும் அவர்களுக்குச் சொல்லித் தந்தா னில்லை.

அவனுக்குத் தெரிந்தால்தானே சொல்லித்தர!

ஒரு நாள் ஒரு பெண் தன் கையில் ஒரு கடிதத்துடன் பள்ளிக்கூடம் நோக்கி வந்தாள்.

இதனை தொலைவிலிருந்தே பார்த்து விட்ட வாத்தியார் ‘வெளியே போய்விட வேண்டும்; அல்லது எங்கேனும் போய் ஒளிந்து கொள்ள வேண்டும்’ என எண்ணி தலைப்பாகையை

எடுத்துக்கொண்டு உள்ளே போய் ஓரிடத்தில் ஒளிந்து கொண்டான்.

'தான் உள்ளே இருப்பதைக் கூற வேண்டாம்' என பிள்ளைகளிடம் கேட்டுக் கொண்டான்.

அப்பெண் உள்ளே வந்தாள்; 'ஆசிரியர் எங்கே?' என வினவினாள்.

அப்பொழுது ஒரு சிறுவன் 'வாத்தியாரா இல்லை! வெளியே போய் விட்டார்' என கூறிக் கொண்டே அவர் ஒளிந்திருந்த இடத்தைப் பார்த்தான்.

அப்பொழுது ஒரு பையன், 'அதோ வாத்தியார்!' என அவன் இருந்த இடத்தைச் சுட்டிக் காட்டினான்.

அது கேட்ட போலி ஆசிரியனுக்கு கை கால்கள் நடுங்கின. அவமானத்தால் முகமே வெளிறிப் போயிற்று.

'ஒன்றுமில்லை! ஓலைச்சுவடி ஒன்று காணாமற் போய் விட்டது. அதைத்தான் தேடுகிறேன்' என்று சமாளித்துக் கொண்டே அப்பெண் முன் வந்தான் அவன்.

அப்போது அப்பெண், அவனை ஒரு பெரிய பண்டிதன் என எண்ணிக்கொண்டு, "ஐயா! கக்கடிதத்தைப் படித்துக் காட்டுங்கள்!" என கூறினாள்.

அது கேட்டு அவனின் உடல் முழுவதும் வேர்த்துக் கொட்டியது.

அவனுக்குத்தான் அரிச்சுவடி கூட படிக்கத் தெரியாதே! இந்தக் கடிதத்தை எவ்வாறு படிப்பான்?

"இதோ வந்து விடுகிறேன்" என கூறிவிட்டு அவன் வெளியே கிளம்பினான்.

“ஐயா! இதைப் படித்து விட்டுச் செல்லுங்கள்!” என வேண்டினாள் அவள்.

அப்பொழுது அவன் படபடப்புடன், “அம்மணி! நான் இப்பொழுது லுஹர் தொழச் செல்லுகிறேன். எனக்கு அதுதான் முதல் வேலை,” என்றான் அவன்.

அது கேட்டு வியப்புற்ற அவள், “லுஹர் தொழுகையா? அதற்கு இன்னும் ஒருமணி நேரம் இருக்கிறதே! என கூறினாள்.

நான் என்ன செய்வேன்? இப்படி வசமாக மாட்டிக் கொண்டேனே! இக்கடிதத்தை படித்துச் சொல்லாமல் இவள் விட மாட்டாள் போலிருக்கிறதே! எழுதப்படிக்கத் தெரியாமலேயே பண்டிதனாகியது தப்பாகப் போய் விட்டதே!

என புலம்பியவாறு அவளிடமிருந்து கடித்தை வாங்கித் தலைகீழாக வைத்துக் கொண்டிட அதனை முறைத்துப் பார்த்தான்.

அவனின் செயல்கள் அவளுக்கு அதிசயமாகத் தோன்றின.

ஆனால் அப்போலி வாத்தியாரோ ஏதோ கோபத்தில் இருப்பது போல் நடித்தான்.

“இது யார் எழுதிய கடிதம்?” என அவளிடமே கேட்டான்.

“வெளியூரில் உள்ள என் கணவர்” என்றாள் அவள்.

“ஆமாம் ஆமாம்! உன் கணவர்தான் உனக்கு எழுதியுள்ளார். இவ்வாறு சொல்லி விட்டு அவன் தன்னுடைய முகத்தைக் கவலையாக வைத்துக் கொண்டான்.

அது கண்டு அவள் அதிர்ச்சியுற்றாள்.

‘தன் கணவனுக்கு ஏதும் நேர்ந்து விட்டது போலும்; அதனைச் சொல்ல இவர் தயங்குகிறார்’ என்று விபரீதமாக சிந்தித்த அவள்,

“ஐயா! என் கணவருக்கு உடல்நிலை சரியில்லை என்று எழுதப்பட்டுள்ளதா?” என்று கேட்டு பதறினாள்.

உடனே அவள், “நான் என்ன சொல்வேன்!” என்று கூறி மேலும் வருத்தப்படுவது போல் நடித்தான்.

அப்பொழுது அவள் பொறுமை இழந்தவளாக, ‘ஐயா! பண்டிதரே! உண்மையைச் சொல்லுங்கள்! என் கணவர் இறந்து விட்டாரா என்ன?” என கேட்டாள்.

படிப்பறிவு சிறிதளவும் அற்ற போலிப் பண்டிதன் ‘ஆம்!’ என்பது போல் தலையை அசைத்துவிட்டு பேசாதிருந்தான்.

கணவர் இறந்து விட்டால் உடனே சில பெண்கள் தங்கள் ஆடையைக் கிழித்துக் கொண்டு அழுவார்கள். இது அறியாமைக் காலத்தின் வழக்கமாகும்.

அதேபோல அவளும் அவனை நோக்கி, “என் ஆடையை நான் கிழித்துக் கொள்ளட்டுமா?’ என கேட்டாள்.

“கிழித்துக்கொள்!” என்றான்.

“முகத்தில் அறைந்துக் கொள்ளட்டுமா?” என கேட்டாள்,

“அறைந்து கொள்” என்றான் அவன்

உடனே அவள் அவன் கையிலிருந்த கடிதத்தை வாங்கிக் கொண்டு, ஓட்டமும் நடையுமாக ஓடினாள்.

வீட்டிற்குச் சென்ற அவளும், குழந்தைகளும் கதறியழுதார்கள்.

இதனை அறிந்த அண்டை வீட்டாரும், உறவினர்களும் அங்கு வந்து கூடி, “என்ன செய்தி? எதற்காக அழுகிறீர்கள்?” என வினவினர்.

அப்பொழுது அவள், “என் கணவர் இறந்து விட்டார். இதோ கடிதம் வந்துள்ள” என்று அழுத வண்ணம் கடிதத்தைக் காட்டினாள்.

செய்தியை நம்பாத உறவினர்கள், அதனை வாங்கிப் படித்துப் பார்த்தனர்.

அதில், "அன்புள்ள மனைவிக்கு!
நான் நலமாக உள்ளேன்!
நீயும், குழந்தைகளும் நலமாக உள்ளீர்களா?
குழந்தைகளை நன்றாகப் பார்த்துக் கொள்ளவும்.
இன்னும் பத்து நாட்களில் நான் புறப்பட்டு வருகிறேன்."
என்று எழுதப்பட்டிருந்தது.

அவளின் கணவர் தன் கைப்பட இவ்வாறு எழுதியிருந்தான்.

இதனை அவளின் உறவினர்கள் அவனுக்குப் படித்துக் காட்டினார்கள்.

உண்மையை அறிந்து அவளும், அவளின் குழந்தைகளும் புளகாங்கிதம் அடைந்தனர்.

அப்பொழுது உறவினர்களில் உள்ள வாலிபன் ஒருவன் "உனக்கு இதனைத் தவறாகப் படித்துக்காட்டி உன் கணவர் இறந்து விட்டதாகக் கூறியது யார்?" என வினவினான்.

அப்பொழுது அவள் நடந்ததைச் சொன்னாள்.

அது கேட்டு வெகுண்டெழுந்த உறவினர்கள், தத்தம் கைகளில் ஆளுக்கு ஒரு கழியை எடுத்துக் கொண்டு போலிப் பண்டிதனின் பள்ளியை நோக்கி ஓடினர்.

இதனை அறிந்து கொண்டே போலிப்பண்டிதன் குழந்தைகள் அனைவரையும் வீட்டுக்கு அனுப்பி விட்டு பள்ளியைப் பூட்டி விட்டு ஓட்டம் பிடித்தான்.

படிக்கவும், எழுதவும் கற்றுக்கொண்ட பின்னரே இனி இந்த ஊருக்குத் திரும்ப வேண்டும் என முடிவு செய்து கொண்டான்.

# 19. கிடைப்பதில் இருவருக்கும் பங்கு

ஒரு நாள் இரவு கலீஃபா ஹாரூன் அல்ரஷீதுக்கு தூக்கம் வரவில்லை. அதனால் அவர் மிகவும் சிரமப்பட்டுக் கொண்டிருந்தார்.

எனவே அவர் தன் அருகில் இருந்த அமைச்சர் ஜாஃபர் அல் பர்மகீயைப் பார்த்து, "இன்று என் மனம் ஒருநிலைப்படவில்லை; அமைதி இல்லை" என கூறினார்.

அது கேட்டு அங்கிருந்த மஸ்ரூர் என்பவன் குபீரென்று சிரித்து விட்டான்.

இதனால் சினமுற்ற கலீஃபா அவனை நோக்கி, "நீ எதனால் இவ்வாறு சிரித்தாய்? என்னை ஏளனம் செய்கிறாயா? அல்லது உனக்குப் பைத்தியம் பிடித்து விட்டதா?" என்று கேட்டார்.

அப்பொழுது அவன் "அமீருல் முஃமினீன் அவர்களே! அல்லாஹ்வின்மீது ஆணையாகவும், அல்லாஹ்வின் தூதர் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்களிடம் தங்களுக்கு உள்ள உறவுமீது ஆணையாகவும்சொல்கிறேன். நான் வேண்டுமென்றே சிரிக்கவில்லை," என்றான்.

உடனே கலீஃபா அவ்வாறாயின் நீ சிரித்ததற்குக் காரணம் தான் என்ன?" என வினவ,

அவன் கூறினான்;

"நான் நேற்று அரண்மனையை விட்டு வெளியேறியவுடன் நேராக பைகரீஸ் நதிக்கரைக்குச் சென்றேன். அங்கு மக்கள் பெருந்திரளாக கூடியிருந்தனர். என்ன நடக்கிறது? என்று என்னை நானே கேட்டுக்கொண்டு அங்குச் சென்று பார்த்த பொழுது, ஒரு மனிதன் எல்லோருக்கும் வேடிக்கை காட்டிக்

கொண்டிருந்தான். மக்கள் தங்கள் கவலைகளை மறந்து அப் பொழுது சிரித்தனர். அவன் பெயர் இப்னு அல்கரீம். அவன் சொன்ன வார்த்தைகள் இப்பொழுது என் நினைவுக்கு வரவே என்னையும் அறியாமல் சிரித்துவிட்டேன். எனவே வேறு எண்ணத்தில் நான் சிரிக்கவில்லை. என்னைத் தாங்கள் மன்னிக்க வேண்டும்.''

அது கேட்ட கலீபா ''நீ இக்கணமே அவனை என்னிடம் அழைத்து வா!'' என்று ஆணையிட்டார்.

மஸ்ரூர் உடனே புறப்பட்டுச் சென்று இப்னு அல்கரீமை அழைத்தான்.

அப்பொழுது மஸ்ரூர் அவனை நோக்கி, ''நான் இப் பொழுது சொல்வதை கவனமாகக் கேள். கலீபாவை உன் நகைச் சுவைப் பேச்சால் நீ சிரிக்க வைக்க வேண்டும். அவ்வாறு செய் யின் உனக்கு நீ வாழ்நாளில் கண்டிராத அளவிற்கு சன் மானத்தை கலீபா வழங்குவார். அவ்விதம் உனக்குக் கிடைக்கும் பணத்தில் கால்பங்கு எனக்கு; முக்கால் பங்கு உனக்கு'' என கூறினான்.

அதற்கு இப்னுல் கரீம் சம்மதிக்கவில்லை. ''அதனை இரண்டு பங்காக்கி பாதி உனக்கு; மீதி எனக்கு'' என்றான் அவன்.

மஸ்ரூர் இதற்கு இணங்கவில்லை.

அப்பொழுது இப்னுல் கரீம், மூன்றில் இரண்டு பங்கு உனக்கு; ஒரு பங்கு எனக்கு! சம்மதமா?'' என்று கேட்டான்.

அதற்கு சம்மதித்த மஸ்ரூர் அவனை கலீபாவிடம் அழைத்து வந்தான்.

கலீபாவைச் சந்தித்த மஸ்ரூர் அவருக்கு சலாம் உரைத் தான்.

அப்பொழுது கலீபா ஹாரூன் அல்ரஷீத் அவனை நோக்கி, "நீ உன்னுடைய நகைச்சுவைப் பேச்சுக்களால் என்னைச் சிரிக்க வைக்க வேண்டும். அவ்வாறு செய்து நான் சிரித்துவிட்டால் உனக்கு வெகுமதி கிடைக்கும். மாறாக உன் பேச்சுக்களைக் கேட்ட பின்னர் நான் சிரிக்கவில்லையென்றால் தோல் பையால் உனக்கு மூன்று அடி கிடைக்கும்.' என கூறினார்.

அது கேட்ட இப்னுல் கரீம் 'அட தோல்பை அடிதானே அது வலிக்குமா என்ன?' என்று அலட்சியமாக நினைத்தான்.

மேலும், சவுக்கால் அடித்தால்கூட அந்த அடி என்னை ஒன்றும் செய்து விடாது. அப்படியிருக்க தோல்பை என்னை என்ன செய்யும் என எண்ணியவாறு பல்வேறு நகைச்சுவைச் செய்திகளைக் கூறத் தொடங்கினான்.

அவற்றைக் கேட்ட கலீபா வாய்விட்டுச் சிரிக்கவில்லை; புன்முறுவலைக்கூட அவர் முகத்தில் காண முடியவில்லை.

அது கண்டு அவனுக்கு அதிர்ச்சி உண்டாயிற்று; 'எனக்கு நிச்சயம் இப்பொழுது அடிவிழப்போகிறது. வசமாகச் சிக்கிக் கொண்டேன், வேணும், வேணும் எனக்கு இதுவும் வேணும், இன்னமும் வேணும், என்று நினைத்த அவனுக்கு உள்ளூர அச்சம் உண்டாயிற்று.

அப்பொழுது கலீபா அவனை நோக்கி "என்ன! அவ்வளவு தான் உன்னிடம் உள்ள சரக்கு! என்னைச் சிரிக்க வைக்க முடிந்ததா உன்னால்? இப்பொழுது தோல் பையால் உன்னை அடிக்க வேண்டியதுதான், "கூறி அவனைத் தோல் பையால் ஓங்கி ஓர் அடி அடித்தார்.

அந்த பைக்குள் பெரிய பெரிய கூழாங்கற்கள் இருந்தன.

இப்னுல் கரீமின் கழுத்தில் பலமான அடி விழுந்தது. அவன் வலியால் துடிதுடித்துக் கதறினான்.

'ஒரு அடிமை தாங்கிக்கொள்ள என்னால் இயலவில்லை! இன்னும் இரண்டு அடிகள் வாங்கினால் நான் செத்து விடுவேனே!' என்று பதறினான் அவன்.

அப்பொழுதுதான் மஸ்ரூடன் செய்துகொண்ட ஒப்பந்தம் அவனின் நினைவுக்கு வந்தது.

'அடடா மறந்து விட்டேனே? கலீபாவிடமிருந்து கிடைப்பதில் ஒரு பங்கு எனக்கும் இரண்டு பங்கு அவனுக்கும் என்பது தானே ஒப்பந்தம். ஒரு பங்கு (ஓர் அடி) எனக்குக் கிடைத்து விட்டது. மீதமுள்ள இரண்டு பங்கு (இரண்டு அடி) மஸ்ரூருக்குத்தானே சேர வேண்டும்!'' என உரக்கக் கூறினான்.

''என்ன ஒப்பந்தம்?'' என்று கலீபா வினவ,

இறை நம்பிக்கையாளர்களின் தலைவரே! தங்களிடம் அழைத்து வருமுன் மஸ்ரூர் என்னிடம் எனக்குத் தங்களிடமிருந்து கிடைக்கும் சன்மானத்தில் மூன்றில் இரண்டு பங்கு தர வேண்டும் எனக் கேட்டார். எனக்கு மூன்றில் ஒரு பங்கு எனவும் நான் ஒப்புக் கொண்டேன். இவ்விதமாக எங்களுக்குள் ஓர் உடன்பாடு ஏற்பட்டது. அதன்படி ஒரு பங்கு சன்மானம் எனக்குக் கிடைத்து விட்டது. மீதமுள்ள இரண்டு பங்கு அவருக்குத் தர வேண்டும். அதோ நின்று கொண்டிருக்கிறான் மஸ்ரூர்.'' என கூறினான் இப்னுல் கரீம்.

இந்த வார்த்தைகளைக் கேட்டு கலீபாஹாரூன் அல்ரஷீத் விழுந்து விழுந்து சிரித்தார்.

பின்னர் அவர் மஸ்ரூரை அழைத்துத் தோல் பையால் ஓர் அடி கொடுத்தார்.

வலி பொறுக்க முடியாமல் 'கோ'வெனக் கூச்சலிட்டுக் கதறினான் மஸ்ரூர்.

 

முஸ்லிம்களின் தலைவரே! எனக்கு மூன்றில் இரண்டு பங்கு வேண்டவே வேண்டாம்; ஒரு பங்கே போதும் என்றான் அவன்.

அது கேட்டு கலீஃபா மேலும் சிரித்தார்.

அதன் பின்னர் தமக்குச் சிரிப்புக் காட்டிய இப்னுல் கரீமுக்கும், அவனை அழைத்து வந்த மஸ்ரூருக்கும் போதிய அளவு வெகுமதி அளித்து அனுப்பி வைத்தார்.



# உங்களுடன் சில நிமிடங்கள்

அன்பார்ந்த இஸ்லாமிய சகோதர சகோதரிகளுக்கு இதயங் கனிந்த அஸ்ஸலாமு அலைக்கும் (வரஹ்)

அனைவர்களின் ஈமான் உறுதிபெற துஆ செய்கிறோம். தாங்களும் எங்களுக்காக துஆ செய்ய வேண்டுகிறோம்.

நாங்கள் சுமார் 35-ஆண்டு காலமாக இஸ்லாமிய புத்தகங் களை சில்லறையாகவும், மொத்தமாகவும் விற்பனை செய்து வந்ததும்; சில ஆண்டுகளாக தொடர்ந்து பல தரமான புரட்சி நூற்களை வெளியிட்டு வருவதும் தாங்கள் அறிந்ததே! எங்கள் நோக்கம் என்ன?

பல ஆண்டுகளுக்கு முன்னால் வெளியிடப்பட்ட தரமான உயர்ந்த இஸ்லாமிய புத்தகங்கள் மறு பதிப்பு போடாமலும், சிறந்த எழுத்தாளர்கள் பலர் பல புரட்சி கருத்துக் கொண்ட ஆராய்ச்சி நூற்களை எழுதி, அவற்றை அச்சு வாகனத்தில் ஏற்ற முடியாமல் கை ஏட்டுப் பிரதிகளாகவே பல ஆண்டு காலம் முடங்கி கரையானுக்கு இரையாகி வருவதும், பல அரபி, உர்தூ, பார்ஸி கிரந்தங்களில் அரிய பல பொக்கிஷங்கள் இருந்தும் தமிழறிந்த மக்களுக்கு மொழி பெயர்த்து கொடுக்கப்படாமல் இருப்பதும், இக்கால சில முதியவர்கள் முதல் வாலிபர்கள்வரை அறவே மார்க்கக் கல்வி இல்லாததால் தொழுகை, நோன்பு மற்றும் அடிப்படை கொள்கையான சிறுநீர் சுத்தம் செய்வது முதற்கொண்டு இஸ்லாமிய முறைப்படி உடலுறவு, குளிப்பு முதலியவை வரை அறியாமலும், கேட்டு அறிந்து கொள்ளவும் வெட்கப்பட்டு தவறான வழியில் செல்வதை அறிந்து மனம் வேதனை தாங்காமல்...

முடங்கிக் கிடக்கும் கையேட்டுப் பிரதிகளையும், அரபி, உருது, பார்ஸி கிரந்தங்களை தேர்ச்சி மிக்க ஆலிம்களைக்

 

بسم الله الرحمن الرحيم



கொண்டு மொழிபெயர்த்தும், மார்க்கத்தின் அனைத்து சட்ட திட்டங்கள், நுணுக்கங்கள், சரித்திரங்கள், சம்பவங்கள், விளக்கங்கள் யாவற்றையும் நூற்களாக தொகுத்து இனிய தமிழில் எளிய நடையில் தரமான முறையில் வெளியிட்டு வருகிறோம்.

எங்களின் நோக்கம் இஸ்லாமிய சேவையேயன்றி லாபமல்ல என்று உறுதி கூறுகிறோம்.

எங்களின் சேவைக்கு ஊக்கமளித்து இன்னும் பல புத்தகங்களை தொடர்ந்து வெளியிட மகிழ்ச்சியும் ஆர்வமும் காட்டி வரும் அனைவருக்கும், ஹஜ்ஜின் போது கஃபத்துல்லாஹ்வின் திரையைப் பிடித்து எங்கள் சேவைக்காகத் துஆச் செய்ததாகவும், எங்கள் நூற்களைப் படித்து அறியாமையிலிருந்து விலகி நேர்வழி பெற்றதாகவும் தபால்கள் எழுதிய நண்பர்கள் பலருக்கும் கண்ணீர் துளிகளோடு உளங்கனிந்த நன்றியைத் தெரிவிப்பதுடன் தங்களின் உறவினர், நண்பர்களுக்கும் எங்கள் ஸ்தாபனத்தை அறிமுகம் செய்யும்படியும் கேட்டுக் கொள்கிறோம். இன்ஷா அல்லாஹ், வருங்காலத்திலும் இது போன்ற தரமான நூற்களை மக்கள் பயனடையும் வகையில் நாங்கள் வெளியிட எங்களுக்காக இறைவனிடம் இறைஞ்சக் கோருகிறோம். உலகம் அனைத்திலும் பரவி வாழ்ந்து வரும் தமிழறிந்த சகோதர சகோதரிகள் அனைவருக்கும் இஸ்லாமிய சேவை செய்யும் பாக்கியத்தைக் கொடுத்த இறைவனுக்கே புகழனைத்தும்.

காஜியார் புக் டிப்போ நிறுவனத்தார்

தஞ்சாவூர்.